marxist.tncpim.org 999 477 6471



பிப்ரவரி 2019, விலை ரூ.15.00

# மார்க்சிஸ்ட்

தத்துவார்த்த மாத இதழ்

2018 ஜனவரி முதல் ஒலி இதழாகவும் வெளியாகிறது

# மார்க்சைப் படிப்பது என்பது என்ன?



தங்கள் மீதும், சமுதாயத்தின் மீதும், மனித வளர்ச்சியின் மீதும் ஆளுமை கொண்டவர்களாக மக்கள் மாறிய பிறகு வரலாற்றின் அலை முன்னோக்கி மட்டுமே நகரும் என்றும், நடப்பில் உள்ள நிலைமைகளின் தொடர்ச்சியான மாற்றங்களின் மூலம் உணரக்கூடியதாக கம்யூனிச லட்சியம் இருக்கும்

ஜி ஜின்பிங்

இட ஒதுக்கீடு : மார்க்சிஸ்ட் கட்சியின் அணுகுமுறை

சிங்காரவேலரின் மார்க்சிய பார்வை

# பொருளடக்கம்

# 1. இட ஒதுக்கீடு ஏன் எவ்வாறு?

*(1990களில் தோழர் இ.எம்.எஸ் எழுதிய சிறு பிரசுரத்தின் சுருக்கம்)*

*காலங்காலமாக சாதியமைப்பு “சூத்திரனுடைய நடவடிக்கை கள், அது தனிப்பட்டதோ, சமூக ரீதியானதோ அல்லது பொருளாதார ரீதியானதோ இப்படி எந்த நடவடிக்கையாயினும் அவற்றின் முக்கிய அம்சங்கள் மீது அவனுடைய தாழ்ந்த சமூக அந்தஸ்து கடுமையான பாதிப்பினை ஏற்படுத்தியிருந்ததது. இயல்பாகவே பிராமணர்களுக்கு மிக உயர்ந்த ஸ்தானத்தையும், சூத்திரர்களுக்கு கீடிமட்ட அந்தஸ்தையும் உறுதிப்படுத்துகின்ற வகையில் பழங்கதைகளும், வேதங்களும் பயன்படுத்தப்பட்டன.*

*தனி மனித வாழ்க்கையின் ஒவ்வொரு அம்சத்தின்மீதும் சாதிகள் கட்டுப்பாடு வகித்ததால் சரிசமானமில்லாத சமுதாய அமைப்பு உருவாவதற்கே இது இட்டுச் சென்றது. வேறு வார்த்தைகளில் கூறுவதென்றால் இந்த கீழ்த்தட்டு மக்கள் சமூக ரீதியாக மட்டுமல்லாது, கல்வி அரசியல் மற்றும் பொருளாதார ரீதியாகவும் பின்தங்கிய நிலையிலிருந்தார்கள். மறுபுறத்தில், மற்ற உயர்சாதியினர் மேற்குறிப்பிட்ட அனைத்துத்துறைகளிலும் முன்னேறியிருந்தனர். இந்த சம்பிரதாயபூர்வமான சமுதாய அடுக்கில் எந்தவொரு சாதியும் எத்தகைய - அதாவது உயர்ந்த அல்லது தாழ்ந்த இடத்தை வகித்ததோ அந்த அந்தஸ்துதான் அச்சாதியின் முன்னேற்றத்தையோ அல்லது பின்தங்கிய நிலையினையோ தீர்மானித்தது.” (பக்கம் 14.17, என்கிறது மண்டல் கமிஷன் அறிக்கை.*

*1957-ஆம் ஆண்டு, சட்டக்கல்லூரியில் பட்டம் பெற்ற பின்பு, இந்தியாவில் தீண்டாமையை ஒழிப்பதற்கு எடுத்து வரும் முயற்சிகள் குறித்து ஆய்வு நடத்தும் நோக்கத்துடன், ஃபுல் பிரைட் ஸ்காலர்ஷிப் பெற்றுக் கொண்டேன். எனக்கு பழகிப்போயிருந்த அமெரிக்க சிவில் உரிமைகள் என்ற கண்ணாடி மூலம் ஆராய்ச்சி நடத்திய எனக்கு, இந்தியாவில் சிவில் உரிமைகளை அமுல்படுத்தும் வகையில் சிலருக்கு அதிகப்படியான சலுகைககள் அளிக்கும் திட்டம் திகைப்பூட்டுவதாக இருந்தது. சட்டத்திற்குமுன் அனைவரும் சமம் என்ற கோட்பாட்டை வலியுறுத்தும் வேளையிலேயே வரலாற்று ரீதியாக சுரண்டப்பட்ட மக்களுக்கு திட்டமிட்ட*

*சலுகைகள் அரசியல் சாசனத்தின் மூலம் உறுதி செய்ததும் எனக்கு திகைப்பூட்டுவதாக இருந்தது. பிறப்பால் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்கிற கொள்கையினை தொடர்ந்து இந்திய நாட்டின் நீண்ட கால விரிந்த அனுபவம் அமெரிக்கக்கொள்கைகளுக்கு ஒரு பாடமாக அமையக்கூடும் (மார் காலாந்தர் எழுதிய "போட்டியிடும் சமத்துவங்கள்" - பக் .17)*

*வேறு நாடுகளைப்போல் அல்லாமல், அத்தகைய நலிந்தவர்களின் பிரச்சினை முற்பட்டவர்கள்என்றும் அவர்களுக்கு எதிராக பிற்படுத்தப்பட்டவர்கள் என்றும் இந்தியாவில் உருவாகியிருக்கிறது. மீண்டும் மண்டல் கமிஷனின் வார்த்தைகளிலேயே கூறுவது என்றால், "பாரம்பரியமான இந்திய சமுதாயத்தில் சமூக ரீதியான பின்தங்கியநிலைமை என்பதே சாதி அந்தஸ்தின் நேரடிவிளைவாகும். மேலும் வேறு பல பின்தங்கிய நிலைமைகளும் இத்தகைய தடைகளிலிருந்துநேரடியாக பிறப்பெடுத்தவையேயாகும். (பக்.17)*

*மண்டல் கமிஷன் பின்வருமாறு குறிப்பிடுகிறது. "ஒடுக்கப்பட்ட அல்லது உரிமைகள்பறிக்கப்பட்ட மக்களுடைய நலன்களுக்கானபல்வேறு சிறப்பு திட்டங்களை கடந்த சுமார் நூறுஆண்டுகளாக இந்தியாவிலுள்ள மாநிலஅரசாங்கங்கள் பல நிறைவேற்றி வந்திருக்கின்றன. இந்த வகையில் முதல் நடவடிக்கை 1885-ஆம்ஆண்டில் சென்னை மாகாணத்தில் எடுக்கப்பட்டதாகும். ஒடுக்கப்பட்ட பிரிவைச் சார்ந்தமாணவர்களுக்கு கல்வி நிலையங்களில் பிரத்தியேக சலுகைகளை வழங்குவதற்கான நிதி மானியவிதிமுறை (பூசயவே - in ஹனை ஊடினந) ஒன்றை சென்னைமாகாண அரசாங்கம் உருவாக்கியது.*

*அடுத்தது 1921-ஆம் ஆண்டில் சென்னை மாகாணசட்டமன்றத் தில் ஏற்கப்பட்ட தீர்மானம் ஒன்றின்அடிப்படையில், அரசுப் பணிகளில் பிராமணரல்லாதவர்களுக்கு அதிகப்படியான பிரதிநிதித்துவத்தை வழங்குவதற்கும் சென்னை மாகாண அரசாங்கத்தினர் நடவடிக்கைகளை மேற்கொண்டனர்.மீண்டும் 1927-ஆம் ஆண்டு இட ஒதுக்கீட்டுக்கானஎல்லை மேலும் விரிவுபடுத்தப்பட்டது. மாகாணத்திலுள்ள சாதிகள் அனைத்தையும் ஐந்து பரந்தபிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொரு பிரிவுக்கும், இவ்வளவு இடஒதுக்கீடு என்று வரையறைசெய்யப்பட்டது." (பக்.5)*

*அரசியல் சட்டம்அரசியல் சட்டத்தில் இரண்டு வகையானஇடஒதுக்கீட்டிற்கு*

*வகை செய்யப்பட்டுள்ளது.ஒன்று நாடு முழுவதும் செல்லத்தக்க வகையில்,தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி மக்களுக்கானஇட ஒதுக்கீடு; இரண்டாவது, தாழ்த்தப்பட்டமற்றும் பழங்குடி மக்கள் தவிர சமூக ரீதியாகவும்கல்வி ரீதியாகவும் பின்தங்கிய பிரிவு மக்களுக்கான இட ஒதுக்கீடு. இந்த இரண்டாவது வகைஒதுக்கீட்டின் அடிப்படையில்தான், ஆந்திரபிரதேசம், பீகார், குஜராத், கர்நாடகம், கேரளம்,மகாராஷ்டிரம், பஞ்சாப் , உத்திரப் பிரதேசம்போன்ற மாநிலங்களில் ஏனைய பிறப்படுத்தப்பட்ட மக்களுக்கான இட ஒதுக்கீட்டிற்கு வகைசெய்யப்பட்டிருக்கிறது. சில மாநிலங்களில்இத்தகைய இட ஒதுக்கீடுகள் அரை நூற்றாண்டுக்கும் மேலாக இருந்துவருகின்றன.*

*இருப்பினும் இந்த மாநிலங்களில் (தாழ்த்தப்பட்ட மற்றும் பழங்குடி மக்களுக்கு தவிர) மத்தியஅரசாங்கப் பணிகளில் இட ஒதுக்கீடு என்பதுகிடையாது. நாடு முழுவதுமுள்ள, சமூக ரீதியாகவும், கல்வி ரீதியாகவும் பின்தங்கியவர்களுக்கு 27சதவீத இட ஒதுக்கீடு செய்வது என்ற வி.பி.சிங் அரசாங்கத்தின் முடிவு இந்த வெற்றிடத்தைஇட்டு நிரப்பியருக்கிறது. இவ்வாறு இட ஒதுக்கீடு விரிவுபடுத்தப்பட்டதை இயல்பாகவே சமூகமற்றும் கல்வி ரீதியாக பின்தங்கியவர்கள் வரவேற்கிறார்கள்; மாறாக, பல நூற்றாண்டுகளாகஅதிகாரத்ததை ஏகபோகமாக அனுபவித்தவர்கள் கடுமையாக எதிர்க்கிறார்கள்.*

*வேறுவார்த்தைகளால் கூறுவதென்றால் சாதி அமைப்புமுறையின் காரணமாக ஏற்பட்ட அசமத்துவ நிலையினை போக்குவதுதான் விஷயம். பாரபட்சத்திற்கு உள்ளாகியிருந்த பிரிவினர் மட்டுமல்லாது,பல நூற்றாண்டு காலமாக அதிகாரத்தை ஏகபோகமாக அனுபவித்த பிரிவினருக்குள்ளிருக்கும் முற்போக்கு சிந்தனை கொண்டவரும்,இதனை ஆதரித்து நிற்க வேண்டும்.தாழ்த்தப்பட்ட மக்கள், பழங்குடியினர் மற்றும்ஏனைய பிற்படுத்தப்பட்டசாதியினர்தான் இரண்டுவகையான ஒடுக்குமுறையினால் பாதிக்கப்பட்டவர்கள். அதாவது அவர்கள் ஒடுக்கப்பட்ட சாதியினர் மட்டுமல்லாமல் ஒடுக்கப்பட்ட வர்க்கங்களையும் சேர்ந்தவர்கள். வேறு வார்த்தைகளில்கூறுவதென்றால் இட ஒதுக்கீடு முன்னேறியசாதியிலுள்ள ஏழைகளின் முன்னேற்றத்திற்காகஉருவாக்கப்படவில்லை; மாறாக முன்னேறியசாதியினர் எட்டியிருக்கும் சமூக, பொருளாதார, கலாச்சார மட்டத்தின்*

அளவிற்கு ஒடுக்கப்பட்ட சாதியினரையும் முன்னேற்றுவதுதான் இடஒதுக்கீட்டின் நோக்கம்.

மண்டல் குழு அறிக்கை குறிப்பிடுவது யாதெனில்சமூக, கல்வி அடிப்படைக்கான குறியீடுகளுடன், பொருளாதார அடிப்படைக்கான குறியீடுகளுக்கும் முக்கியத்துவம் அளிக்கப்பட்டு பரிசீலிக்கப்பட்டன. சமூக ரீதியாகவும், கல்வி ரீதியாகவும்பின்தங்கிய நிலையில் இருப்பவர்கள் பொருளாதார ரீதியாகவும் பின்தங்கியிருக்கிறார்கள் என்றவிஷயத்தை அழுத்தமாக எடுத்துச் சொல்வதற்குஇது உதவியது.

காலேல்கர் கமிஷன், மண்டல் கமிஷன் ஆகியஇரண்டுமே, சமூக (சாதி) ஒடுக்குமுறையின்காரணமாக ஏற்பட்ட சமூக மற்றும் கல்விரீதியான பின்தங்கிய நிலைமையை ஒரு தொடக்கநிலையாகக் கொண்டு அத்துடன் பொருளாதாரநிலையையும் இணைத்துப் பார்த்தன. அதன் காரணமாகத்தான், காலேல்கர் கமிஷன் பரந்தஅளவில் ஒட்டுமொத்தமான பரிந்துரைகளைவழங்கியது.

“தீவிரமான நிலச்சீர்த்திருத்தம்,கிராமப் பொருளாதார மறுசீரமைப்பு, பூதானஇயக்கம், கால்நடை மற்றும் பால்பண்ணைவளர்ச்சி, கால்நடை இன்சூரன்ஸ், தேனீ வளர்ப்பு,மீன் வளர்ப்பு, கிராமப்புற மற்றும் குடிசைத்தொழில் வளர்ச்சி, கிராம வீட்டு வசதி, பொதுசுகாதாரம், கிராமப்புற குடிநீர் விநியோகம்,முதியோர் கல்வி, பல்கலைக் கழக கல்வி,அரசாங்கப் பணிகளில் பிற்படுத்தப்பட்டவர்களுக்கு பிரதிநிதித்துவம் முதலிய பல்வேறுதுறைகளை உள்ளடக்கயி பரிந்துரைகள் அவை”(மண்டல் அறிக்கை பக்1)மண்டல் கமிஷனும் இடஒதுக்கீட்டுப்பிரச்சினையை சமூக பொருளாதார கலாச்சாரமுன்னேற்றத்தின் பிற அம்சங்களுடன் இணைத்தேபரிசீலித்தது.

அறிக்கை கூறுகிறது. “பின்தங்கியநிலைமையின் வேர்கள்வெட்டப்படாதவரைஅரசாங்கப்பணிகளிலும், கல்வி நிலையங்களிலும் இட ஒதுக்கீடு, அதே போன்று முடிந்தஅளவிலான நிதி உதவி என்பதெல்லாம் அவ்வப்போது சுகமளிக்கும் மருந்தாகத்தான் இருக்கும்.சிறுநில உடமையாளர்கள், குத்தகை விவசாயிகள், விவசாயக் கூலிகள், வறுமையிலாழ்த்தப்பட்ட கிராம கைவினைஞர்கள், தொழில் தேர்ச்சி பெறாத உழைப்பாளிகள் முதலியவர்களில்

*பெரும்பகுதியினர் தாழ்த்தப்பட்ட மக்கள், பழங்குடியினர் மற்றும் ஏனைய பிற்படுத்தப்பட்ட வர்க்கங்களேயாவர்.” ( பக்.60)“அரசாங்க அதிகாரிகள் பலரும் பெருநிலச்சுவான்தார் குடும்பங்களிலிருந்து செல்கிறவர்கள்என்பதால், அரசு அதிகாரிகளுக்கும் பெருநிலச்சுவான்தார்களுக்கும் இடையிலான வர்க்க மற்றும்சாதி இணைப்பு உறுதியாக தொடர்கிறது.*

*இந்த இணைப்பு சமூக - அரசியல் பலாபலங்களை பெருநிலைச்சுவான்தார்களுக்கு அனுகூலமாக மாற்றி மற்றவர்கள் மீது அவர்களுக்கிருக்கும் மேலாதிக்கத்திற்கு துணைபுரிகிறது.” ( பக்.60) வர்க்கப் பார்வைதாழ்த்தப்பட்ட மக்கள், பழங்குடியினர் மற்றும்ஏனைய பிற்படுத்தப்பட்ட மக்களின் முன்னேற்றம் என்பது விவசாயப் புரட்சிக்கான அடிப்படைக் கடமைகளுடன் தொடர்புடையது என்றும் அத்தகைய புரட்சியின் மூலம்தான், நிலப்பிரபுக்கள், லேவா தேவிக்காரர்கள், வியாபாரிகள் மற்றும் கிராமப்புறத்திலுள்ள ஒடுக்குமுறையாளர் அனைவரின் கோரப்பிடியிலிருந்து பெரும்பான்மையான கிராமப்புற மக்களை விடுதலை செய்யமுடியும் என்ற மார்க்சிய வரையறைக்கு மண்டல் அறிக்கையின் நிர்ணயிப்புகள் இசைவானதாக அமைந்துள்ளன. விவசாயப்புரட்சி வெற்றி பெற வேண்டுமென்றால்,முன்னேறிய சாதிகளையும் பிற்படுத்தப்பட்டசாதிகளையும் சேர்ந்த கிராமப்புறம் முழுவதுமுள்ள ஏழை மக்களின் போர்க்குணமிக்க வர்க்கஒற்றுமை மிகவும் அவசியம்.*

*முன்னேறிய சாதிகளைச் சேர்ந்த கிராமப்புறநகர்புற ஏழைமக்கள் அனைவரும் தங்களது வர்க்கசகோதர, சகோதரிகளே என்பதையும், நெருக்கமாகஅவர்களுடன் இணைந்து நிலச்சீர்த்திருத்தங்கள்,அனைவருக்கும் வேலை; அனைவர்க்கும் கல்விமற்றும் உடனடிக் கோரிக்கைகளுக்கான போராட்டத்தில், கிராமப்புறத்தையும் நகரங்களையும் சேர்ந்தசுரண்டல்காரர்களுக்கு எதிராக, போர்க்குணமிக்க ஒற்றுமையை உருவாக்க வேண்டுமென்றும் தாழ்த்தப்பட்ட மக்கள், பழங்குடியினர் மற்றும் ஏனைய பிற்படுத்தப்பட்டட சாதிகளைச் சேர்ந்தவர்களை உணரச் செய்தல் வேண்டும்.*

*ஆகவேதான், இந்து - முஸ்லீம் ஒற்றுமைக்காக போராடுவது போலவே, முன்னேறிய சாதிகள் பிற்படுத்தப்பட்ட சாதிகளின் ஒற்றுமைக்களும், இடதுசாரி*

மற்றும் மதச்சார்பற்ற ஜனநாயகசக்திகள் போராடுகின்றன. தகுதியும் திறமையும் இடஒதுக்கீடு காரணமாக தகுதியும் திறமையும் குறைந்து விடும் என்று வாதிடும்போது, பல நூற்றாண்டுகளாக பெரும்பான்மை மக்கள் சமூகரீதியாகவும் வலாச்சார ரீதியாகவும் பின்தங்கியநிலையிலேயே வைக்கப்பட்டிருந்தனர் என்பதையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். (சுதந்திரத்திற்கு கால் நூற்றாண்டுக்கு முன்பாகவே இடஒதுக்கீடு அமலில் இருந்து வரும்) தென்மாநிலங்கள் முழுவதிலுமிருந்து இடஒதுக்கீடு அடிப்படையில் பணிகளுக்கு தேர்ந்தெடுக்கப்படும் வேட்பாளர்களின் தகுதி, இடஒதுக்கீடு இல்லாத இந்தியாவின் மற்ற மாநிலங்களில் தேர்ந்தெடுக்கப்படுவர்களின் தகுதியை விடகுறைவானது என எவரும் கூறிவிடமுடியாது.

இன்னும் சொல்லப் போனால், நாட்டின் மற்ற மாநிலங்களைவிட இடஒதுக்கீடு உள்ள மாநிலங்களின் நிர்வாகம் சிறந்ததாகவும் அதிக திறமையுடனுமிருக்கிறது. இடஒதுக்கீடு அடிப்படையில் இம்மாநிலங்களில் தேர்ந்தெடுக்கப்படும் அதிகாரிகளும், ஊழியர்களும் நடைமுறைப் பணிகளில் எவரையும் விட இளைத்தவர்கள் அல்லர். தேசிய ஒற்றுமை முன்னேறிய சாதிக்காரர்கள் நடத்திய மண்டல் எதிர்ப்பு போராட்டங்களுக்கு எதிர்ப்பாக பிற்படுத்தப்பட்டவர்கள் போராட்டத்தை தொடங்க வேண்டும் என்று சில வட்டாரங்கள் வேண்டுகோள் விடுத்ததை இங்கு நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

இது முன்னேறிய சாதிக்களுக்கும் பிற்படுத்தப்பட்ட சாதிகளுக்குமிடையில் சாதியுத்தம் நடத்த வேண்டும் என்பதற்காக விடப்பட்ட வேண்டுகோளே தவிர வேறொன்றில்லை. இது கண்டிப்பாக இந்தியமக்களை பிளவுபடுத்தி, சமூக அரசியல் அமைப்பை நிலைகுலையச் செய்யும். ஆகவே, தேசிய ஒற்றுமையைக் காப்பதில் அக்கறைகொண்ட அனைவர்க்கும் இந்த யுத்தத்தை தவிர்ப்பது அவசியமாகிறது. முன்னேறிய சாதிகளைச் சேர்ந்த நியாய உணர்வு படைத்தவர்களுக்கு மன நிறைவு அளிக்கும் வகையிலும் இந்த பிரச்சனைக்கு தீர்வு காணவேண்டும்.

ஏனெனில், முன்னேறிய சாதிகளிலிருந்து தான் ஆண்களும் பெண்களும் இட ஒதுக்கீட்டுக்கெதிராக கிளர்ச்சி செய்து வருகின்றனர். இடஒதுக்கீட்டை ஏற்கமுடியாது என்ற அவர்களின் வாதத்தை நிராகரிக்கும்போதே, இருக்கும்

இடஒதுக்கீடு மாநிலத்திலிருந்து மத்திய அரசுப் பணிகளுக்கும் விரிவுபடுத்த வேண்டும் என்று வலியுறுத்தம் போதே,முன்னேறிய சாதியினரின் நியாயமான அச்சங்களையும் போக்குவதற்கு தேவையான கவனம் எடுத்துக் கொள்ள வேண்டும். சாதியுடன் இணைந்த பொருளாதார அடிப்படை இடஒதுக்கீட்டிற்கு சாதிதான் முக்கிய அடிப்படை என்றாலும், சாதியுடன் பொருளாதார அடிப்படையும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று கம்யூனிஸ்டுகளும் மற்ற இடதுசாரிகளும் கூறி வருகின்றனர். பீகாரில் இடஒதுக்கீட்டிற்கான போராட்டம் கடுமையானபோது, இடஒதுக்கீட்டை ஆதரித்தும், எதிர்த்தும் லட்சக்கணக்கானோர் தெருவில் இறங்கி போராடத்தொடங்கினர்.

அன்று முதலமைச்சராக இருந்த காலஞ்சென்ற கர்ப்பூரிதாகூர் இந்த பிரச்சனையை எப்படி தீர்ப்பது எனதீவிரமாக சிந்தித்தார். இயல்பாகவே, கேரளத்தில் இத்தகைய போராட்டங்களின் போது கிடைத்த அனுபவத்தையெல்லாம் பரிசீலனை செய்து,அதில் மேலும் சில முன்னேற்றங்கள் செய்தார். சமூக மற்றும் கல்வி ரீதியாக பிற்படுத்தப்பட்ட மக்களை பிற்படுத்தப்பட்டவர், மிகவும் பிற்படுத்தப்பட்டவர் என இரண்டு பிரிவுகளாகப்பிரித்தார். மிகவும் பிற்படுத்தப்பட்டவர்களுக்கு சாதி அடிப்படையில் மட்டும் ஒதுக்கீடு செய்யப்பட்டது. மற்ற பிற்படுத்தரப்பட்டவர்களுக்கு சாதி அடிப்படையில் ஒதுக்கீடு செய்யப்பட்டாலும்,அச்சாதிகளிலுள்ள பணக்காரர்களுக்கு அந்தச்சலுகை கிடையாது என முடிவு செய்யப்பட்டது.

இடஒதுக்கீடு மிக அதிகமாக தேவைப்படுகின்ற பகுதியினருக்கு, அதாவது மிகவும் பிற்படுத்தப்பட்டவர்கள் எனப்படும் ஏழை எளிய மக்களுக்கு இடஒதுக்கீட்டின் பலன்கள் சென்றடையும் பிற்படுத்தப்பட்டவர்களிலே வசதி படைத்தவர்களுக்கும் பணக்காரர்களுக்கும் இடஒதுக்கீட்டின் பலன்கள் கிட்டாது. நீதிபதி சின்னப்பரெட்டி தலைமையில் அமைக்கப்பட்ட கமிஷன்கர்நாடக மாநிலத்திற்கும் இதே போன்றதொருதிட்டத்தை பரிந்துரை செய்தது.

வி.பி.சிங் அரசாங்கம் அனைவரின் கருத்தையும் கேட்டறிந்த பின்பு பீகார் பாணியிலேயே,சிறிது முன்னேற்றங்களுடன் ஒரு அடிப்படையைஉருவாக்கியிருந்தால், அரசாங்க பணிகளுக்கான வாய்ப்பு போய்

விடுமோ என்று அச்சம் கொண்டிருக்கும் உயர்சாதிகளைச் சேர்ந்த நியாய உணர்வுபடைத்தவர்களின் இடஒதுக்கீடு எதிர்ப்பினை கூர்மழுங்க செய்திருக்க முடியும். மண்டல் கமிஷன் பரிந்துரைகள் அமுல்படுத்துவதில் வி.பி.சிங்அரசாங்கம் நடந்து கொண்ட முறை குறித்துகோட்பாடு ரீதியாக இந்திய கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்) முன்வைக்கும் விமர்சனம் இதுதான்.

# 2. சிங்காரவேலரின் மார்க்சியப் பார்வை

என்.குணசேகரன்

மானுட விடுதலைக்கு வழிகாட்டுகிற தத்துவம் மார்க்சியம். காரல் மார்க்ஸ் பிறந்து இருநூறு ஆண்டுகள் ஆன இன்றைய பின்னணியில் சிங்கரவேலரின் மார்க்சிய சிந்தனை தமிழக சிந்தனைப் பரப்பில் முக்கியத்துவம் வாய்ந்தததாக உள்ளது, அது இன்றைக்கும் பொருத்தப்பாடு கொண்டதாகவும் உள்ளது. இந்திய விடுதலை இயக்கத்தின் முன்னணித் தலைவர், தென்னகத்தின் முதல் கம்யூனிஸ்ட் இயக்கப் போராளி,தொழிலாளர் இயக்கங்களையும், தொழிலாளர் போராட்டங்களையும் தலைமையேற்று நடத்திய தலைவர் ,மிகச்சிறந்த அறிவியல் பரப்புரையாளர், சுயமரியாதை இயக்கத்தின் கருத்தியல் செயல்பாட்டாளர் என பன்முகத் தளங்களில் பணியாற்றியவர் சிங்காரவேலர். இதன் காரணமாக அவர் தமிழக அறிவுத் தளத்தில் அழிக்க முடியாத முத்திரை பதித்தவராக உயர்ந்து நிற்கிறார்.

சிந்தனைச் சிற்பி சிங்காரவேலர் தமிழகத்திற்கு மார்க்சிய தத்துவத்தின் முழுப்பரிமாணங்களை அறிமுகம் செய்து வைத்தவர், அத்துடன் மார்க்சியத்தை மக்கள் இயக்கமாக மாற்றும் இலட்சியப் பணியையும் துவக்கி வைத்தவர்.

### தமிழகத்தில் மார்க்சிய எழுச்சி:

இருபதாம் நூற்றாண்டின் துவக்க ஆண்டுகளில் தமிழகத்தில் அரசியல், சமூக இயக்கங்கள் பல வளர்ச்சி பெற்றன.ஆங்கிலேய ஆட்சிக் காலத்தில் தமிழ்ச் சமூகத்தில் நிகழ்ந்த கருத்தியல் உருவாக்கங்கள் பல்வேறு வகைப்பட்டனவாக இருந்தன. சமுக,மத சீர்திருத்தங்கள்,ஆங்கிலேய ஆட்சியின் பொருளாதார ஒடுக்குமுறை எதிர்ப்பு போன்றவற்றின் தாக்கங்களோடு காலனிய எதிர்ப்பு பலமடைந்து வந்தது.

பாரதியின் படைப்புகள், பெரியார் தலைமையில் இயங்கிய திராவிட இயக்கம், அயோத்திதாஸர் போன்றவர்களின் சாதி மறுப்பு இயக்கம் ஆகியவற்றோடு கம்யூனிஸ்ட் இயக்கச் செயல்பாடும் வளர்ச்சி கண்டது. இவை அனைத்தும் ஒன்றுக்கொன்று வலு சேர்த்தன.இந்த சூழலில் மார்க்சிய

*சிந்தனை வலுப்பெற்றது. சிங்காரவேலர் செயல்பாடு தமிழகத்தில் மார்க்சியம் உறுதியாக வேரூன்ற மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக அமைந்தது.தமிழ்ச் சமூகத்தின் இன்றைய கருத்தாக்க நிகழ்வுகளிலும் முக்கிய செல்வாக்கு செலுத்தி வருவதற்கு அன்றைய தலைமுறையின் அயராத கருத்தியல் செயல்பாடு முக்கிய காரணமாக இருந்ததை மறுக்க இயலாது. இதற்கு சிங்கரவேலரே முன்னோடியாகத் திகழ்கின்றார்.*

*தமிழகத்தில் இன்றளவும் அரசியல்,பொருளாதாரம்,கலை,பண்பாடு என பல துறைகளில் மார்க்சியத்தின் தாக்கம் இருந்துவருவதோடு மார்க்சியத்திற்கு தனி ஈர்ப்பு நீடித்து வருகிறது. இதற்காக அன்று வலுவான அடித்தளம் அமைத்தவர் சிங்காரவேலர். இறுதி மூச்சு வரை அவர் மேற்கொண்ட மார்க்சிய பரப்புரையும், மார்க்சிய நோக்கிலான படைப்புக்களும் தமிழ் மண், மார்க்சியத்தை சுவாசித்திட வழிவகுத்தது.*

*மார்க்சியத்தை பரப்புவதற்கு பல தளங்களையும் வாய்ப்புக்களையும் அவர் பயன்படுத்தினார்.மாற்றுக் கொள்கை கொண்டவர்களிடமும் சில பொது நோக்கங்களை முன்னிறுத்தி இணைந்து பணியாற்றும் போது தனது கொள்கைகள் மேலாண்மை பெற ஒரு மார்க்சியர் எவ்வாறு பணியாற்ற வேண்டும் என்பதற்கு இலக்கணமாகத் திகழ்ந்தவர் சிங்காரவேலர். பெரியார் காங்கிரசிலிருந்து விலகி சுய மரியாதை இயக்கத்தை துவங்கியதும் அவரோடு சிங்காரவேலர் இணைந்து செயல்பட்டதும் வரலாறு. இந்த இணைந்த செயல்பாட்டையும், சுயமரியாதை இயக்க மேடைகளை, பொருள் முதல்வாதக் கோட்பாடுகளையும் கம்யூனிசக் கொள்கைகளையும் பரப்புவதற்கு சிங்காரவேலர் பயன்படுத்தினார்.*

*"குடிஅரசு", "புரட்சி" ஆகிய வார இதழ்களில், சமுதாயச் சீர்திருத்தம் மற்றும் , பகுத்தறிவுக் கருத்துகள், சோசலிச கொள்கைகள், அறிவியல் விளக்கங்கள் என பல்வேறு வகைகளில் மார்க்சிய கருத்துக்களை எழுதி வந்தார். காங்கிரஸ், சுயமரியாதை இயக்கங்களின் தளங்களை மார்க்சிய பரப்புரைக்கு அவன் பயன்படுத்தியதில், அவரது தனிச்சிறப்பு வாய்ந்த மார்க்சிய நடைமுறையின் மகத்துவம் வெளிப்பட்டது.*

*அன்று உலக அளவில் மார்க்சியம் பல சவால்களை எதிர்கொண்டது.*

*அது, தத்துவத்துறையில் கடுமையான போராட்டம் நிகழ்ந்து வந்த காலம்.மார்க்சியத்தை திரித்து அதன் புரட்சிகர கூர்மையை மழுங்கச் செய்திடும் போக்கு தீவிரமாக இருந்த காலம்.ஜெர்மனியில் பெர்ன்ஸ்டைன் எனப்படும் சமூக ஜனநாயக கட்சியின் தலைவர் தலைமையில் 'சோசலிசம் வென்றடையும் இலக்கு அல்ல. மாறாக அது ஒரு நிகழ்வுப் போக்கு' எனக் கூறி, 'சோசலிசத்திற்கான இயக்கம் மட்டுமே முக்கியம்; இலக்கு அல்ல' என்று மார்க்சியத்தை நீர்த்துப் போகச் செய்யும் முயற்சிகள் தொடர்ந்து நீடித்து வந்தன. அத்தகைய போக்குகளுக்கு எதிராக லெனின் தலைமையில் உண்மையான மார்க்சியவாதிகள் பெரும் கருத்துப்போரை நிகழ்த்தி வந்தனர்.1917 நவம்பரில் வெற்றி கண்ட ரஷியப் புரட்சி, மார்க்சியத்தின் புரட்சிகர உயிர்ப்பினை மீண்டும் உயர்த்திப் பிடித்தது.*

*ரஷியப் புரட்சியின் வெற்றி நிகழ்ந்த காலத்தில் சிங்காரவேலர் தொழிலாளர் இயக்கங்களை நடத்துவதில் தீவிரமாகப் பணியாற்றி வந்தார். உலகத் தொழிலாளர்களின் ஒற்றுமை, சுரண்டலிலிருந்து விடுதலை, மார்க்சிய இயக்கவியல், வரலாற்றுப் பொருள்முதல்வாதம் உள்ளிட்ட பல தத்துவார்த்த, மார்க்சிய நடைமுறைகள் பற்றிய பிரச்சாரத்தை அவர் செய்து வந்தார். குறிப்பாக 1920.-ம் ஆண்டுகளிலிருந்து, 1930-ம் ஆண்டு சிறை சென்று விடுதலையான காலங்களில் அவர் தீவிரமாக இப்பணிகளை மேற்கொண்டார். 1946ம் ஆண்டு இறக்கும் வரை அவர் மார்க்சிய லெனினியத்தை எழுதியும் பேசியும் வந்துள்ளார்.*

### தத்துவ செயல்பாடு

*மார்க்சியத்தில், தத்துவம், அரசியல் பொருளாதாரம், விஞ்ஞான சோசலிசம் எனும் மூன்று முக்கிய அடிப்படைக் கூறுகள் உண்டு என்று லெனின் வரையறுக்கிறார், (லெனின் மார்க்சியத்தின்) இதேபோன்று, சிங்காரவேலரின் செயல்பாட்டுத் தளங்களையும் வகைப்படுத்தி அறிந்திட முடியும். மார்க்சிய தத்துவம் இயக்கவியல் பொருள்முதல்வாதம்,வரலாற்றுப் பொருள்முதல்வாதம் எனும் இரண்டு பிரிவுகளைக் கொண்டுள்ளது. மார்க்சிய தத்துவப் பார்வையில் ஆழமான தெளிவான பார்வை கொண்டவராக சிங்காரவேலர் வாழ்ந்திருக்கிறார்.*

*எங்கெல்ஸ் தத்துவத்தின் அடிப்படைப் பிரச்னை பற்றி எழுதுகிற போது குறிப்பிடுகிறார். ''எல்லாத் தத்துவங்களுக்கும் அடிப்படைக் கேள்வி, இருத்தலுக்கும்,*

சிந்தனைக்கும் இடையேயான உறவு பற்றியதுதான்" தத்துவக் களத்தில் போரிடும் இரு முகாம்களை எங்கெல்ஸ் விளக்குகிறார். ஆன்மா, புற உலகு உறவு பற்றி "...பதிலளித்த தத்துவவாதிகள் இருகூறாகப் பிரிந்தனர். ஆன்மாவை இயற்கைக்கு முதன்மையாக கருதியவர்கள் கருத்துமுதல்வாத முகாமாகப் பிரிந்தனர். இயற்கையை பிரதானமாக முதன்மைப்படுத்தியவர்கள் பொருள்முதல்வாத முகாமாக இயங்கினர்."

மார்க்சியத்தின் இந்த வரையறை அடிப்படையில் உலகத் தத்துவங்கள் அனைத்தையும் பொருள்முதல்வாதம், கருத்துமுதல்வாதம் என்ற இரு பெரும் பிரிவுகளுக்குள் அடக்கி விடலாம். தத்துவ சிந்தனைப் பரப்பில் நடக்கும் போராட்டங்களை வகைப்படுத்த ஏங்கெல்ஸ் காட்டிய வழிகாட்டுதல் உதவுகிறது, இரண்டு பிரிவுகளுக்கும், ஆளும் வர்க்கம் சார்பு, ஒடுக்கப்படும் வர்க்க சார்பு என்ற பின்னணி உண்டு என்பதையும் மார்க்சியம் வழியாக சிங்காரவேலர் உணர்த்தியுள்ளார்.

"சமூகமும் பொருளாதாரமும்" என்ற கட்டுரையில் சிங்காரவேலர் பொருள்முதல்வாத விளக்கத்தை எழுதுகிறார்:

"உயிர்கள் யாவும், பொருளைப்(things) பற்றியுள்ளன. எல்லா உயிரும் பொருளை ஆதாரமாகக் கொண்டுள்ளன. உயிர்கள் பொருளால் ஆக்கப்பட்டும்,பொருளால் தத்தம் ஜீவனத்தை நடத்தியும்,வாழ்ந்து வருகின்றன.பொருள் இல்லையெனில்,எந்த ஜீவனும் வாழா..."பொருளுக்குப் படைப்புக் கடவுள் என்று எதுவும் இல்லை என்பதும் பொருளே முதன்மையானது அதன் பிரதிபலிப்பே சிந்தனை என்றும் மார்க்சிய நிலைப்பாட்டில் நின்று உலக இயக்கத்தை சிங்காரவேலர் விளக்கியுள்ளார். இக்கருத்தினை அன்றைய அறிவியல் வளர்ச்சியின் துணை கொண்டு அவர் விளக்கியுள்ளது தான் சிறப்பானது. இந்தப் பாங்கு இதர பகுத்தறிவாளர்களிடமிருந்து வேறுபட்டு தனிச்சிறப்பு கொண்டவராக சிங்காரவேலரை முன்னிறுத்துகிறது.

### அறிவியலோடு இணைந்த தத்துவம்

அவரது எழுத்துக்களில் முக்கிய இடம் பெறுவதாக, 1932-ல் எழுதிய 'கடவுளும்

*பிரபஞ்சமும்', 'கடவுளும், மனிதனும்' போன்ற கட்டுரைகளைக் குறிப்பிடலாம். கடவுள் எனும் கருத்தாக்கம் மனிதனால் படைக்கப்பட்ட ஒரு கற்பிதம் என்று அறிவியலைக் கொண்டு ஆதாரப்பூர்வமாக பேசுகிற கட்டுரைகள் இவை. தன் காலத்தின் முக்கியமான அறிவியல் கண்டுபிடிப்புகளைக் கொண்டு சிங்காரவேலர் விரிவாக பொருள்முதல்வாதப் பார்வையை முன்வைக்கிறார். டார்வினின் பரிணாம வளர்ச்சி, -ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் சார்புத் தத்துவம் போன்றவற்றை வலுவாகப் பற்றிக் கொண்டு அறிவியல் விளக்கங்களை அளித்துள்ளார்.*

*இதன் வழியாக, மார்க்சின் வரலாற்று பொருள் முதல் வாதப் பார்வையை விளக்குகிறார். இது அல்லாமல் புரூனோ, கோபர்னிகஸ் உள்ளிட்ட அறிவியலாளர்களையும் தத்துவாசிரியர்களில். ஸ்பைனோஸா, காண்ட், ஸ்பென்சர், ஹெகல் உள்ளிட்டோரது கருத்துக்களையும் விவாதிக்கின்றார். அவர் எழுதிய 'விஞ்ஞானமும் மூடநம்பிக்கைகளும்' என்ற தொடரிலும் அறிவியல் கருத்துக்களை பொருள்முதல்வாத கண்ணோட்டத்துடன் எழுதினர். அவரது காலம் வரை பிரபஞ்சம், விண்மீன்கள், அணு, மின்னணு பற்றிய கண்டுபிடிப்புகளை அவர் ஆழமாக பயின்றிருந்தார்.*

*அறிவியலோடு இணைந்து மார்க்சியம் தோன்றிய வரலாற்றுச் சூழலை அவர் விளக்கியுள்ளார்:*

*அறிவியல் வானம், பூமி, பிரபஞ்சம், அணு என ஆராய்ந்து இயற்கை இரகசியங்களை அறிய முனைப்புடன் அன்று இயங்கி வந்தது. ஆனால் 'மனித சமுகத்தில் வறுமை வந்த காரணத்தையும், இல்லாமையின் காரணத்தையும் அவைகளை போக்கும் மார்க்கத்தினையும் தெரியாமல் தவித்து வந்ததையும்" விவரிக்கும் சிங்காரவேலர், இந்த கட்டத்தில் மார்க்சியம் பிறப்பெடுத்து அரிய சமுக கண்டுபிடிப்புக்களை கண்டறிந்ததை விளக்குகிறார். விஞ்ஞானத்திற்கு இரண்டு கருவிகள் உண்டு என்கின்றார் சிங்காரவேலர். 'அவையாவை எனில் முதலாவது பார்த்தல், (observation) இரண்டாவது பரீட்சித்தல் (experiment). இவ்விரண்டு கருவிகளைக் கொண்டே இதுவரை தெரிந்திருக்கும் சம்பவ காரணங்களை விளக்கமுற்றன.'*

இந்த அறிவியல் கருவிகளை பயன்படுத்தாத காரணத்தினால் மந்திரங்கள், பொய் பித்தலாட்ட மூட நம்பிக்கைகள் மலிந்து கிடக்கின்றன என்கிறார் சிங்காரவேலர்.இது முழுக்க பொருள்முதல்வாத அறிவியல் அணுகுமுறை. அதே போன்று மேற்கண்ட அறிவியல் கருவிகள் மூலமாகவே மனித அறிவு வளர்ச்சி ஏற்படுகிறது என்று அவர் கூறுகிறார். மார்க்சிய அறிவுத் தத்துவத்தையும் அவர் குறிப்பிடுகிறார்: "இனித் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களும் மகத்தானதென சொல்லலாம். இதுவரை தெரிந்திருக்கும் விஷயங்கள் தினை அளவு என்று சொல்ல வேண்டும்." எல்லையற்ற அறிவு வளர்ச்சிக்கு வித்திடுவதாக மார்க்சிய அறிவுக் கோட்பாடு விளங்குகிறது என்பதை சிங்காரவேலரின் எழுத்துக்களில் உணர முடியும்.

ஒரு தத்துவ மாநாட்டில் பகுத்தறிவைப் பயன்படுத்துவதால் உலகம் சீர்கெட்டு கிடக்கிறது என்று டாக்டர் ராதாகிருஷ்ணன் பேசினார்.அந்தக் கருத்தை எதிர்த்து எழுதுகிறபோது "ஆதி மனிதன் நெருப்பை கண்டுபிடித்தது முதல் நேற்று நாம் தீக்குச்சி செய்து வருவது வரை மனிதன் பகுத்தறிவை உபயோகித்து வந்திருக்க அதிகமாக பகுத்தறிவை உபயோகித்தபடியால் நமக்கு வந்தது கேடு என்றால், இதனினும் உன்மத்தப் பேச்சை நாம் கேட்டறியோம்? பகுத்தறிவின் உதவியின்றி எந்த மனித விவகாரம் நடக்கும்" என்று கடும் ஆவேசத்துடன் எழுதியுள்ளார்.

இயக்கவியல் பார்வைக்கு அறிவியல் இன்றியமையாதது என்று மார்க்ஸும் ஏங்கெல்ஸும் போதித்தனர். சோசலிசத்திற்கான போராட்டத்தில் அறிவியல் புரட்சிகர பங்கினை வகிக்கிறது என்பதனை அவர்களது எழுத்துக்கள் உணர்த்துகின்றன. இதே பார்வையினை உறுதுணையாகக் தனது மார்க்சிய பரப்புரை செயல்பாடுளை சிங்காரவேலர் மேற்கொண்டார்.

மக்களிடையே நிலவுகிற மூட நம்பிக்கைகளை அறிவியல் துணை கொண்டு விளக்கும்போதும் மார்க்சிய நோக்கிலான பொருள்முதல்வாதம் பளிச்சிடுகிறது. அவர் புது உலகம் இதழில் சூரிய, சந்திர கிரகணங்களில் அறிவியல் உண்மையை எழுதி மக்களின் அறியாமையை போக்கிட முயற்சித்துள்ளார். சுரண்டல் அடிமைத்தனத்திலிருந்து உழைக்கும் மக்கள் விடுதலை பெற வேண்டுமெனில் அறிவியல் அடிப்படையிலான மார்க்சியப் பொருள்முதல்வாதம்தான் ஒரே வழி

*என்பதில் அவர் உறுதிப்பாடு கொண்டவராக இறுதி நாள் வரை செயல்பட்டார்.*

*சாதி மதம் – பொருள்முதல்வாத பார்வை:*

*சமூகப் பிரச்னைகளை ஆராய்கிற போது வரலாற்று பொருள்முதல்வாத அடிப்படையை கெட்டியாகப் பற்றி நின்றார், சிங்காரவேலர். சாதி, மதம் தொடர்பான பிரச்னைகளை நிறைய விவாதித்துள்ள சிங்காரவேலர், அதன் பொருள்முதல்வாத அடிப்படையை மிக எளிமையாக விளக்கியுள்ளார். "மதங்கள் யாவும், எந்த மதமானாலும், சரி, புத்த மதமானாலும், இந்து மதமானாலும், கிறிஸ்து மதமானாலும், மகமதிய மதமானாலும், எல்லா மதங்களும் பொருளாதாரத்தில் நெருங்கிய சம்பந்தம் பெற்றுள்ளவை; பொருளின் செல்வாக்கை நோக்கியே எந்த மதங்களும் கட்டப்பட்டுள்ளன; இன்றைக்கு மதங்கள் உலகில் செழிப்படைந்து வருவது பொருள் ஆதாயம் மதஸ்தர்களுக்கு இருப்பதால்தான்...'*

*அப்பட்டமாக அவர் அன்று எழுதிய கருத்து இன்றும் பொருத்தமுடையதாகத் திகழ்கிறது.இன்று மதத்தை அதிகாரத்திற்கு வருவதற்கு பயன்படுத்திக் கொண்டு ஆட்சியை கார்ப்பரேட் முதலாளித்துவ குழுமங்கள் செழிக்க இந்துத்துவ சங்கப் பரிவாரங்கள் பயன்படுத்துவதைக் காண்கிறோம். அதே போன்று சாதி இயங்குவதற்கு அடிப்படையாக இருக்கும் பொருளியல் நலன்களையும் அவர் விளக்கியுள்ளார்.*

*"ஜாதியும், பொருளாதார நட்பிலேயே கலந்துள்ளது. நான்கு வருணத்தார்களாகிய பிராமணர், ஷத்திரியர், வைசியர், சூத்திரர்களுக்குள் ஏற்பட்ட வேற்றுமை பொருளாதாரத்தையொட்டியே ஜனித்திருக்க வேண்டும். எப்படியெனில், கடை வருணத்தாராகிய சூத்திரன் ஏழையாகவே இருந்து வந்திருக்கின்றான். இன்றைக்கும் பிராமணர்கள் பெரும்பான்மை சூத்திரர்களை விட பொருள் பெருத்திருப்பதைக் காணலாம்....பணத்திற்கு முன் ஜாதி என்ன செய்யும்..பணம் படைத்த அரிச்சந்திரன் அரசனான். பணம் இழந்த அரிச்சந்திரன் வெட்டியானான்..."என்று எழுதுகிறார்.*

*"ஆதலின் ஜாதி ஒழிய வேண்டுமாயின் பொருளாதார சமத்துவம் ஏற்பட வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும்"என்று அவர் வந்தடையும் முடிவும்*

வரலாற்று பொருள்முதல்வாத நோக்கில் வந்தடையும் முடிவாகவே அமைந்துள்ளது.

## பொதுவுடைமை விளக்கம்

உலகெங்கும் அன்று செயல்பட்டுக் கொண்டிருந்த கம்யூனிஸ்ட் இயக்கங்களை அவர் அறிந்திருந்தார். அவர்களது நிலைபாடுகளை ஆராய்கிற போது மார்க்சிய இயக்கவியல் வரலாற்றுப் பொருள்முதல்வாதக் கண்ணோட்டத்துடன் அணுகியிருக்கிறார்.தம் காலத்தின் உலக அரசியல், உலக அறிவியல் முன்னேற்றம், தத்துவ வளர்ச்சி உளிட்ட அனைத்திலும் மார்க்சியப் பார்வையுடன் விவாதித்துள்ளார்.

'பொதுவுடைமை விளக்கம்' என்ற விரிவான கட்டுரையில் பொதுவுடைமைக் கோட்பாட்டினையும், தத்துவத்தையும் பல பரிமாணங்களில் விளக்குகிறார் சிங்காரவேலர். பொதுவுடமையும் செல்வமும், பொதுவுடமையும் தனியுடைமையும், பொதுவுடமையும் வேலை இல்லாமையும்' என பல தலைப்புக்களில் விளக்கிகிறார்.இந்த விளக்கங்களின் ஊடாக முதலாளித்துவத்தின் தீமைகளை விளக்கி,பொதுவுடைமைக் கொள்கையின் மேன்மையை விளக்குகிறார்.

மத வேறுபாடுகள்,சாதி வேறுபாடுகள் குறித்தும் பொதுவுடைமை இலட்சியத்தை அடைய இவை எவ்வாறு தடையாக உள்ளன என்பதையும் விளக்குகிறார்.

'பொதுவுடையும் பெண்களும்' என்ற தலைப்பில் விவாதிக்கும் போது," குடும்ப வாழ்க்கையிலும் பொருளாதார நிலைமையிலும்,கல்வி கேள்வியிலும், ஆண்களுக்கும் பெண்களுக்கும் உயர்வு தாழ்வு இருத்தல் கூடாது" என்று மார்க்சியத்தின் முக்கிய நெறியான பெண் சமத்துவத்தை வலியுறுத்துகிறார். சிங்காரவேலரின் மார்க்சியப் பார்வைதான் உழைப்பாளி வர்க்கத்தின் அரசியலை, விடுதலை இயக்கத்தின் நிகழ்ச்சி நிரலில் முக்கியமானதாக மாற்றியது.காங்கிரஸ் அன்று வெறும் அரசியல் விடுதலலைக்கான போராட்டத்தை நடத்தி வந்த நிலையில் பொருளாதார சுரண்டைலையும் முடிவிற்கு கொண்டு வரும் செயல்திட்டத்தோடு களம் இறங்கியவர் சிங்காரவேலர்.

ரஷியப் புரட்சிக்கு, தொழிலாளி – விவசாயி ஒற்றுமை, புரட்சி முன்னேறிட

*உதவியது. 1920-ம் ஆண்டுகளின் போதே தொழிலாளர் விவசாயி வர்க்கக் கூட்டணி பற்றிய கருத்துக்களை பதிவு செய்துள்ளார் சிங்காரவேலர். இந்த வர்க்கங்கள் இந்திய அரசியலில் செல்வாக்கு பெற்று தங்கள் நலனை பாதுகாத்துக் கொள்ள, ஒரு அரசியல் கட்சியை உருவாக்க முனைந்தார். அக்கட்சிக்கு ஹிந்துஸ்தான் தொழிலாளர் விவசாயி கட்சி எனப் பெயரிட்டார். இவ்வாறு பொதுவுடைமைக்கு விளக்கம் கொடுத்து அந்த லட்சியத்தை அடைவதற்கான இயக்கங்களையும் கண்டவர் சிங்காரவேலர்.*

### *சோசலிசப்பார்வை*

*“உலகப் பொருள்கள் யாவும் உழைப்பவனால் உண்டாக்கப்பட்டபடியால், உழைப்பவனுக்கே உலகம் உரியதென்ற மாபெரும் உண்மையை தனது சிறப்பு வாய்ந்த மூலதனம் என்ற நூலில் (மார்க்ஸ்) எடுத்துரைத்தார்.”இவ்வாறு தொடங்கி தொழிலாளியின் உழைப்பினால் உலகப் பொருள்கள் உருவானது என்றும் உழைப்பு செலவிட்ட பிறகே இயற்கைப் பொருள்களுக்கு விலை மதிப்பு உண்டாவது பற்றியும் அவர் விளக்கி மார்க்சின் ‘உபரி மதிப்பு’ ‘விஞ்ஞான சோசலிசம் பற்றிய விளக்கவுரைகளை எழுதுகிறார்.*

*முதலாளித்துவம் தனக்கு சவக்குழி தோண்டும் தொழிலாளர் வர்க்கத்தை தன்னிலிருந்தே உருவாக்கி வரும் என்ற மார்க்சிய நிர்ணயிப்பையும், நிலபிரபுத்துவ வர்க்கங்களை ஒழிக்க தொழிலாளர்களை வர்க்கப் போராட்டத்திற்கு கொண்டு வந்த முதலாளிகள், பின்னர் அதே தொழிலாளர் வர்க்கம் முதலாளியத்திற்கு எதிராகத் திரளுகிற நிலையும் சிங்காரவேலர் எடுத்துரைக்கிறார். இதர அனைத்து வர்க்கங்களும் முதலாளி/தொழிலாளி என்ற இரண்டில் ஒன்றாய் மாறுவார்கள் என்ற நிகழ்வு போக்கை பதிவு செய்கிறார்.இவை அனைத்தும் மார்க்சியத்தின் அரசியல் பொருளாதார விளக்கங்களாக அமைந்துள்ளன.*

*மேல்தட்டு முதலாளித்துவ வர்க்கங்களின் நலனுக்காகவே அரசுகளின் செயல்பாடு இருப்பதையும் சிங்காரவேலர் மார்க்சின் அரசு பற்றிய பார்வையை விளக்குகிறார்.சரக்குகளின் மீதான வரி உள்ளிட்ட பல வகைகளில் மக்களிடம் வருமானத்தை பெற்று,அவர்களின் வீடு உள்ளிட்ட தேவைகளை அரசு புறக்கணிக்கின்றன என்று அரசுகளை அம்பலப்படுத்துகிறார்.*

மக்களும் அரசுகளின் நடவடிக்கைகள் பற்றி அறியாமல் இருப்பதையும் வேதனையோடு சுட்டிக் காட்டுகிறார். ”சர்க்கார்கள் செய்யும் படாடோபங்களை கண்டு மக்கள் மயங்கி வருகின்றார்களே ஒழிய,தங்களுடைய குழந்தைகளுக்கு பால் இருக்கின்றதா என்று சிந்திப்பரில்லை” என்று எழுதிய அவரது எழுத்தைப் படிக்கும்போது, இன்றும் இந்த நிலை நீடிக்கிறதே என்ற எண்ணம் வருவதை தடுக்க முடியவில்லை .

சோசலிசத்தின் கூறுகளை பட்டியலிட்டு விளக்குகிறார். நிலமும் நீரும் பொதுவுடைமையாக்கி, அவற்றில் விளையும் தானியங்களும், செல்வங்களும் அனைவருக்கும் விநியோகிக்கப்பட வேண்டும்:சிலர் அவற்றை அபகரிப்பதை நிறுத்தி,ஒரு சிலர் அளவுக்கு மீறிய வசதி வாய்ப்புக்களை பெற்றிருப்பதால் மற்ற பெரும்பான்மை மக்களுக்கு அவை இல்லாமல் போகிறது;போட்டியினால் விலைகள் உயர்த்தப் படுவதும் பொருளுற்பத்தி மக்கள் தேவையை புறந்தள்ளிவிட்டு இலாப நோக்கில் மேற்கொள்ளப்படுவதையும் சிங்காரவேலர் எளிமையாக விளக்குகிறார். இதனால்தான் நெருக்கடிகள் தொடர்கின்றன என்ற மர்ர்க்சிய பார்வையும் அளிக்கிறார்.

“உலகம் நெருக்கடியிலிருந்து மீண்டும் சுகப்பட வேண்டுமானால், மனித வாழ்விற்கு வேண்டிய பொருள்கள் யாவும் பொதுவுடைமையாக்கப்பட வேண்டிய அவசியத்தையும் “அவர் விளக்குகிறார். சோஷலிச உருவாக்கம் குறித்து, அன்றைய காலக்கட்டத்தில் மேற்கத்திய சோசலிச இயக்கங்களுக்குள் இருந்த சமரசப் போக்கையும் அவர் விமர்சிக்கிறார். அவர்கள் அடிப்படையை மாற்றாமல் அமைக்க விரும்பும் “கூட்டுறவு ஆட்சி” எனப்படுவது “சிறுபான்மை முதலாளிகளை நிலைக்க வைத்து பெரும்பான்மை தொழிலாளர்களுக்கு யாதொரு சமத்துவமும் சுதந்திரமும் இல்லாமல் போகும்.” என்ற அவரது எச்சரிக்கை இன்றைய கம்யுனிச இயக்கங்களும் எடுத்துக் கொள்ள வேண்டிய ஒன்றாக உள்ளது. சோசலிசம் என்ற முகமூடி அணிந்து அன்று நாஜிக்களும் பாசிஸ்ட்டுகளும் செயல்பட்டு வந்ததையும் அவர் அடையாளம் காட்டுகிறார்.

பாட்டாளி வர்க்கம் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்று மார்க்ஸ் வந்தடைந்த இலட்சிய முடிவினை தனது கொள்கையாகக் கொண்டு

*வாழ்ந்தார்,சிங்காரவேலர்.அவரது பல உரைகளில் தொழிலாளர்கள் அதிகாரத்தைக் கைப்பற்ற வேண்டும் என்று பல முறை குறிப்பிட்டுள்ளார்.*

*1933 மே 7ஆம் தேதி அன்று அவர் ஆற்றிய உரையில்,*

*“உழைப்பாளர்களின் அரசு உலக சமாதானத்தை அடிப்படையாக கொண்டு இருக்கும். சமத்துவத்தை வலியுறுத்தவே தொழிலாளர் விவசாயி கட்சி ஆரம்பிக்கப்பட்டது. நாம் அரசில் பங்கு பெற்றால் சமத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட நியாயமான நெறியிலேயே உருவாக்குவோம். நிலம் மற்றும் நீர் அத்தியாவசிய தேவைகள், கப்பல்கள், இரயில்கள், சுரங்கங்கள் அனைத்தும் பொது சொத்தே. அவை மக்கள் நலனுக்காகவே பயன்படுத்தப்படும். ....உழைப்பாளர்களின் ஆட்சியின் கீழ் உருவாகும் சமத்துவம் மூலமே உலகம் அமைதியாக வாழும். சமத்துவம் வளமைக்கு இட்டுச் செல்லும்.” என்று குறிப்பிடுகிறார்.*

*மார்க்சியம் சர்வதேசியத்தை வலியுறுத்தும் தத்துவம். இதற்கு அடிப்படைக் காரணம் உண்டு.உலகளாவிய பிணைப்பு கொண்டது மூலதனம்.மூலதனம் தனது இலாப வேட்டையையும், சுரண்டலையும் உலகளாவிய தன்மையில் நடத்துகிறது. எனவே அது தனி உடைமையிலிருந்து சமுகத்திற்கு உடைமையாக வேண்டும். அதனை உலகளாவிய பாட்டாளி வர்க்கப் போராட்டம்தான் சாதிக்கும். எனவே மார்க்சியம் ஒவ்வொரு நாட்டு நிலைகளை உள்வாங்கி தனது சோசலிச மாற்றத்திற்கான வியுகத்தை உருவாக்குகிறது.அதே நேரத்தில் சர்வதேச தொழிலாளர் ஒற்றுமை கட்டும் பணியிலும் ஈடுபட அது வழிகாட்டுகிறது. இந்த அறிவியல் அணுகுமுறை சிங்கரவேலரின் அரசியல், சமூக தொழிற்சங்க செயல்பாடு ஒவ்வொன்றிலும் இருந்தது.*

*1925-கான்பூர் மாநாட்டில் அவர் ஆற்றிய உரையிலும் இதனைக் காண முடியும். முன்னதாக காங்கிரசின் கயா மாநாட்டில் தன்னை உலக கம்யூனிஸ்ட் இயக்கத்தின் பிரதிநிதி என்று பிரகடனப் படுத்திக் கொள்ளும்போதும் அவரது சர்வதேசிய உணர்வு வெளிப்பட்டது.*

*பாசிச அபாயம் – எச்சரிக்கை*

*“பொதுமக்கள் பெற வேண்டிய ஞானம் “ என்று அவர் குறிப்பிடும்*

*கருத்து இன்று இந்துத்துவ பாசிச சக்திகளின் ஆபத்தில் இந்தியா சிக்கிக் கொண்டிருக்கும் நிலையில் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது. 'பொதுமக்கள் தங்களுக்கு வேண்டுவதைக் கோரி,அதற்கு வேண்டிய உழைப்பை எடுத்துக் கொள்ளாவிட்டால், இத்தாலியிலும்,ஜெர்மனியிலும் சமதர்ம சங்கங்கள் அழிந்ததுபோல், நமது நாட்டிலும் அழிந்துவிடும். எல்லாவிதப் புரட்சியையும் பொதுமக்கள் விரும்பினால்தான் கை கூடி வரும்." இதற்கு பொதுமக்களின் மனதை மாற்ற சோசலிச அமைப்புக்கள் பொதுமக்களிடம் நெருங்க வேண்டும் என்றும்," அதற்கு பிரச்சாரம் தான் தகுதியான கருவி" என்றும் சிங்காரவேலர் அறிவுறுத்துகிறார்.*

*இந்திய நிலைமைகளில் சோசலிசத்தை கொண்டு வருவதில் உள்ள சவால்களையும் அவர் காண தவறவில்லை.' சமதர்ம அறிக்கை என்ற கட்டுரையில், "உலக சமதர்ம உணர்ச்சிக்கு விரோதமான தன்மையில் மற்ற தேசத்திற்கும் இந்தியாவுக்கும் ஒரு முக்கிய வித்தியாசம் இருந்து வருகின்றது. அதென்னவென்றால் மற்ற நாடுகளில் ஒரு விஷயம் தான் முக்கியமாய் கருதப்படுகிறது. அதாவது முதலாளி (பணக்காரன்), வேலையாள் (ஏழை) என்பதுவேயாகும். ஆனால் இந்தியாவிலேயே மேல் ஜாதியார்-கீழ் ஜாதியார் என்பது ஒன்று அதிகமாகவும் முதன்மையானதாகவும் இருப்பதால் அது பணக்காரன், ஏழை தத்துவத்திற்கு ஒரு கோட்டையாக இருந்து காப்பாற்றிக் கொண்டு வருகின்றது. ஆதலால் இங்குச் சமதர்மத்திற்கு இரட்டிப்பு அதிகமான எதிர்ப்பு இருந்து வருவது கொண்டு இங்குச் சமதர்ம உணர்ச்சி தலை தூக்க முடியவில்லை".*

*இன்றும் அடையாள அரசியல் நடத்தும் பல இயக்கங்கள் இந்திய சமுகத்தில் சாதியைக் காண கம்யூனிஸ்ட்கள் தவறி விட்டனர் என அவதூறு செய்து வருகின்றனர்.ஆனால் தென்னிந்தியாவின் முதல் கம்யூனிஸ்ட் என்றழைக்கப்படும் சிங்காரவேலர் சாதிய சவால் குறித்து மிகுந்த விழிப்புணர்வுடன் இருந்திருக்கிறார் என்பதனை மேற்கண்ட கூற்று எடுத்துக் காட்டுகிறது. எனவே பாசிசம், சாதியம் ஆகிய சோசலிச எதிர்ப்பு சக்திகளை எதிர்கொண்டு வெற்றிபெற சிங்காரவேலரின் சிந்தனைகள் வழிகாட்டுகின்றன.*

### *சமதர்ம வேலைத் திட்டமே மாற்று!*

*அன்றைய அரசியலில் செயல்பட்டு வந்த சக்திகளை சோசலிச நோக்குடன்*

*அவர் விமர்சிக்கின்றார். "காங்கிரஸ் சுயராஜ்யம் சமூக மாற்றம் எதுவுமற்ற சுயராஜ்யமாக " இருப்பதை அவர் சுட்டிக்காட்டுகிறார்.அன்று செயல்பட்டு வந்த நீதிக்கட்சியும் அவரது கூரிய விமர்சனப் பார்வைக்கு தப்பிடவில்லை."பிராமணர்கள் போல் பிராமணரல்லாதார் ஒரு சிலர் பட்டம், பதவி பெற மட்டுமே இவ்வியக்கம் உதவியுள்ளதே தவிர, இக்கட்சியால் பொதுமக்களுக்கு என்ன பயன்?" என்று கேள்வி எழுப்பும் சிங்காரவேலர் நீதிக்கட்சியினால் பயன்பெற்றவர்கள் "பிராமணரல்லாத சில மேட்டிமைச் சாதிகளே" என்பதைஅம்பலப்படுத்துகிறார். 'பஞ்சமர் அல்லது தாழ்த்தப்பட்ட சாதியோருக்கு நீதிக்கட்சியால் எந்த பயனும் விளையவில்லை' என்ற புறக்கணிக்க முடியாத விமர்சனைத்தையும் முன்வைக்கிறார்.*

*சமதர்மம் பற்றிய விளக்க கட்டுரைகளில் அவரது மார்க்சியப் பார்வை வெளிப்படுகிறது.. "சமதர்மமென்றால் சொத்துரிமை, மத உரிமை, ஜாதிவுரிமை நீங்கிய வாழ்க்கையாகும்" என்று வரையறுத்துக் காட்டுகிறார். அன்றைய ஏற்பவர்கள் சுயமரியாதை இயக்கத்தினர் இதனை ஏற்க வேண்டுமென்று சோசலிச ஆதரவு சக்திகளை திரட்டுகிறார்.*

*ஆனால் அவர்கள் ஆங்கிலேய ஆட்சியோடு நட்பு பாராட்டும் நிலை இதற்கு தடையாக இருக்கும் என்று சுட்டிக் கட்டுகிறார். சமதர்மத்தை "ஆங்கில அரசின் ஒத்துழைப்போடு இதனைச் சுயமரியாதை இயக்கத்தாரால் செய்யமுடியுமா?" என்று அவர்களை விமர்சிக்கிறார். சமதர்மத்திற்கான பாதைக்கு சுயமரியாதை இயக்கத்தை திரட்ட் முனையும் பல முயற்சிகளில் ஈடுபடுகின்றார். இதில் சுயமரியாதைச் சமதர்ம வேலைத்திட்டம் முக்கியமான கருத்தாக்கமாக அமைந்துள்ளது. வரலாற்று நோக்கில் இந்த திட்டம் எதிர்கால சோசலிச மாற்றுக்கு முன்னோடியாகவும் திகழ்கிறது.*

*மார்க்ஸ் தனது வாழ்க்கையில் தத்துவப் படைப்பாக்கப் பணியை மக்கள் இயக்கம், தொழிலாளர் இயக்கங்களை கட்டுகிற பணியோடு இணைத்துச் செய்தார். அதேபோன்ற வாழ்க்கை நெறியுடன் சிங்காரவேலர் செயலாற்றி வந்துள்ளார். அவரது வாழ்வு இன்றைய சமூக மாற்ற இயக்கங்களுக்கு உத்வேகம் அளிக்கின்றது: அதுமட்டுல்லாது கற்றுப் பயில வேண்டிய ஒரு வாழ்க்கையாகவும் சிங்காரவேலரின் வாழ்க்கை அமைந்துள்ளது.*

குறிப்பு:

சிங்காரவேலர் மேற்கோள்கள் அனைத்தும் பா.வீரமணி, முத்து. குணசேகரன் தொகுப்பாசிரியர்களாகக் கொண்டு வெளியிடப்பட்டட ம.சிங்காரவேலரின் சிந்தனைக்களஞ்சியம் தொகுதி நூல்களிலிருந்து எடுத்தாளப்பட்டுள்ளன.

# 3. தோற்கடிக்கப்பட்ட புரட்சியின் படிப்பினைகள்

*தமிழில்: பாலச்சந்திரன்*

*26 ஆகஸ்ட் 1849 ல், மார்க்ஸ் ஆங்கிலேய மண்ணில் காலடி வைத்தபொழுது லண்டன் மாநகரம், இருபது லட்சத்திற்கும் மேலான மக்கள்தொகை கொண்டதாகவும்,உலகிலேயே மிகப் பெரிய நகரமாகவும், உலகின் 'தொழிற்பட்டறை'யாகவும், வளர்ச்சியடைந்த முதலாளித்துவ நாட்டின் தலைநகரமாகவும் விளங்கியது. 1848 ம் ஆண்டின் வசந்த காலத்தில், அடிப்படை ஜனநாயக உரிமைகளின் விரிவாக்கத்திற்காக, சார்டிஸ்ட் இயக்கம் மாபெரும் ஆர்ப்பாட்டங்களுக்கு அழைப்பு விடுத்த பொழுது, ஐரோப்பிய புரட்சி, இங்கிலாந்தின் கதவுகளையும் தட்டிக் கொண்டிருந்தது. ஆனால், அந்த இயக்கம் மிகப் பெரிய தோல்வியை சந்தித்ததன் விளைவாக அதன் புரட்சிகர சக்தி நீண்ட காலத்திற்கு முற்றிலுமாக அணைந்து போனது.*

*பிரஷ்ய நாட்டின் அப்பட்டமான அடக்குமுறை ஆட்சியைப் போல அல்லாமல், இங்கிலாந்து முதலாளித்துவ உரிமை மற்றும் சுதந்திரத்துடன் கூடிய பாராளுமன்ற ஜனநாயக முறைமையைக் கொண்டிருந்தது. புரட்சிகர இயக்கத்தின் மீது பிரஷ்ய அரசு அடிக்கடி நேரடியான ஒடுக்குமுறையை கையாண்டு கொண்டிருந்தது. ஆனால் இங்கிலாந்திலோ பொருளாதார அடக்குமுறை நிலவியது.ஆளும் வர்க்கத்திற்கு வேண்டப்படாதவர்கள் வாழ்வாதாரத்திலிருந்து தனிமைப்படுத்தப்பட்டனர். சக்தி வாய்ந்ததும்,நுட்பமானதுமான இந்த ஒடுக்குமுறை இயந்திரத்தின் இயக்கத்தை கவனித்த மார்க்ஸ், பிரஷ்ய அரசின் பழங்கால முடியாட்சி அமைப்பினதை விட இந்த ஒடுக்குமுறை எவ்வளவு நுட்பமானது என்பதைக் கண்டறிந்தார்.*

### *அதிகப்படியான பணிகள்*

*ஐரோப்பிய புரட்சியின் தோல்விக்கு பின்னர் சுவிட்சர்லாந்து, அமெரிக்கா போல இங்கிலாந்தும், அதிலும் குறிப்பாக லண்டன், புலம் பெயர்வோர்களின் புகலிட மையமானது. அதேசமயம் அல்லது சற்று பின்னர், மார்க்சைப் போலவே, கம்யூனிஸ்ட் லீகின் முக்கிய முன்னணி உறுப்பினர்களும் வந்து சேர்ந்தனர்., புலம்*

பெயர்ந்த ஜெர்மன் லீகின் உறுப்பினர்களும் கூடும் இடமாக லீகின் லண்டன் கிளை விளங்கியது. சட்டபூர்வமாக இயங்கிய கம்யூனிஸ்ட் வொர்க்கர்ஸ் எஜுகேஷனல் அசோசியேஷனும் புதிய நடவடிக்கையுடன் கூட எழுந்தது.

மார்க்சை பல பணிகளின் சுமை அழுத்தியது.மற்றவர்களுடன் இணைந்து லீகிற்கு ஒரு புதிய செயலகத்தை ஏற்படுத்தினார்.ஜெர்மனியிலிருந்து வரும் அரசியல் அகதிகளுக்கு ஆதரவளிப்பதே அதன் உடனடி பணியாக இருந்தது. வொர்க்கர்ஸ் எஜுகேஷனல் அசோசியேஷன் கூட்டத்தில் இந்த பணியில் உதவிட ஒரு கமிட்டி அமைக்கப்பட வேண்டும் என்ற ஆலோசனையை முன்மொழிந்தார். கூட்டம், அதனை ஏற்று கமிட்டிக்கு தலைவராக மார்க்சை தேர்வு செய்தது. கமிட்டியில் பலரும் கடும் நெருக்கடியில் இருந்தபோதும், அவர்கள் அனைவரும் பொறுப்பு நிதியிலிருந்து அவர்களுக்காக எதுவும் ஏற்பதில்லை என முடிவு செய்தனர். மார்க்சை பொறுத்தவரை அது கம்யூனிச அறநெறியின் சுய வெளிப்பாட்டின் கூற்றாகும். அக்காலங்களில் அவரே கொடுமையான வறுமையில் உழன்று கொண்டிருந்தார்.

அதே சமயத்தில், மார்க்ஸ், தொழிலாளர்-அகதிகளைக் காத்துக் கொண்டும், தலைமறைவாயிருக்கும் உழைக்கும் வர்க்க புரட்சியாளர்களை மீண்டும் ஒன்றிணைக்கவும், கடும் முயற்சிகளை மேற்கொண்டிருந்தார். அது போலவே, கம்யூனிஸ்ட் லீகின் மத்திய செயலகம், கம்யூனிஸ்ட் வொர்க்கர்ஸ் எஜுகேஷனல் அசோசியேஷன் ஆகியவற்றை பலப்படுத்துதல், ஜெர்மனியிலேயே இருந்த லீகின் உறுப்பினர்களுடன் தொடர்பை மீண்டும் உருவாக்குவது என அனைத்து பணிகளிலும் அவர் தன்னை கடுமையாக ஈடுபடுத்தி கொண்டிருந்தார். புலம் பெயர்ந்தோர் மத்தியில் இருந்த குட்டி முதலாளித்துவ ஜனநாயகவாதிகள், அனைத்து ஜெர்மன் அகதிகளையும் தங்கள் தலைமையின் கீழ் கொண்டு வரவும், அவர்களின் சுயேச்சையான வர்க்க அமைப்பை அவர்கள் கை விடச்செய்யவும் முயன்று வந்ததால், மார்க்சின் இத்தகைய கடும் முயற்சி முக்கியமானதானது.

### லீகின் மறுசீரமைப்பு:

இவ்வாறான முயற்சிகளைத் தடுக்க, மார்க்ஸ், கம்யூனிஸ்ட் லீகினை விரைவாக மறு சீரமைப்பு செய்யவும், தொழிலாளர்-அகதிகள் எதிர் கொள்ளும் வர்க்க கடமைகளை விளக்கவும் தமது முயற்சிகளை இரட்டிப்பாக்கினார்.ஜெர்மன் புரட்சி

மீண்டும் வெகு விரைவில் வெடிக்கும் என அவரும், அந்த சமயத்தில் மற்றெல்லா லீகின் உறுப்பினர்களைப் போலவே எதிர்பார்த்தார்.. அவ்வாறான சமயத்தில் தொழீலாளி வர்க்கத்திற்கு என தனித்து இயங்கும் ஒரு கட்சி வேண்டும்.அதுதான் பெரும்பாலான தொழிலாளர்கள் வெறுமனே குட்டி முதலாளிகளின் பின்னே செல்வதை தடுக்கும்.

1850 ம் ஆண்டு துவக்கத்தில், கோட்பாட்டு கேள்விகளை விவாதிக்க லீகின் முன்னணி உறுப்பினர்களை அவருடைய வீட்டிற்கு அழைக்கத் துவங்கினார். கிட்டத்தட்ட அதே சமயத்தில் பொருளாதாரம் மற்றும் கம்யூனிஸ்ட் அறிக்கை பற்றி அப்பொழுது ஜெர்மன் தொழிலாளர் அகதிகள் அதிகமாக இருந்த கம்யூனிஸ்ட் வொர்க்கர்ஸ் எஜுகேஷனல் அசோசியேஷனில் தொடர் சொற்பொழிவுகள் ஆற்றினார். பாடன் நகரில் கையில் ஆயுதமேந்தி எதிர் புரட்சியாளர்களை எதிர் கொண்ட இளம் மாணவ அகதியும், அதனால் சுவிட்சர்லாந்து வழியே லண்டன் ஒடி வந்தவரும், விரைவிலேயே மார்க்ஸ் மற்றும் ஏங்கல்சிற்கு உண்மையான மாணவர், நண்பர் தோளோடு தோள் நிற்கும் தோழருமான வில்ஹெம் லீப்னஹெட் மார்க்ஸ் செயல்படும் முறையை கீழ்காணும் வரிகளில் வர்ணிக்கிறார்.

“ ஒரு கருத்தை அவர் முடிந்தவரை சுருக்கமாக அறிமுகப்படுத்துவார். அதனை பின்னர் விரிவாக விளக்குவார். தொழிலாளர்கள் புரிந்து கொள்ள முடியாத சொற்றொடர்களைத் தவிர்க்க மிகுந்த அக்கறையை எப்பொழுதும் மேற்கொள்வார். பின்னர் கேள்விகள் கேட்க சொல்வார். ஒன்றும் கேள்விகள் வரவில்லை எனினும், கவனித்தவர்களை சோதிப்பார். எந்த தவறான புரிதலோ அல்லது குறைபாடோ இன்றி அத்தகைய ஆசிரியத்திறத்துடன் மிக நேர்த்தியாக அதனை செய்வார்.”

### புதிய பத்திரிக்கை

லண்டனில் புலம் பெயர்ந்த வாழ்வை துவங்கிய முதல் சில மாதங்களில் புதிய பத்திரிக்கை ஒன்றை தோற்றுவிக்க மார்க்ஸ் சிறப்பு கவனம் செலுத்தினார். அப் புரட்சியிலிருந்து எதிர்கால போராட்டங்களுக்கு எத்தகைய படிப்பினை, உத்தி மற்றும் தந்திரங்கள் தொழிலாளி வர்க்கத்திற்கு கிடைத்தது என்பதை அப்பத்திரிக்கையில் விளக்குவதுதான் அவரது நோக்கமாகும். உலகெங்கும் பரவியுள்ள தொழிலாளி வர்க்க புரட்சியாளர்களின் அரசியல் செயல்பாட்டிற்கு

*அத்தகைய பத்திரிக்கை அவசியமானதாகும். அதன் வெளியீட்டிற்கான பணத்தேவை, அதனைக் கொண்டு வர மிக கடினமாக இருந்தது.*

*தற்போது புகழ் பெற்ற பெயரான 'நியு ரெனிஷ் செய்தித்தாள்' என்ற பெயரில் தினசரியாக இல்லாமல்,குறிப்பிட்ட கால வெளியீடாக அரசியல் பொருளாதார ஆய்வுடன் கொண்டு வர திட்டமிடப்பட்டது. கம்யூனிஸ்ட் லீகின் பத்திரிக்கையாக, புத்தகக் கடை வாயிலாக மட்டுமில்லாமல் லீக் உறுப்பினர்கள் வாயிலாகவும் வினியோகிக்கப்பட இருந்தது. இவ்வாறாக அது லீகின் பிரச்சார நடவடிக்கைகளுக்கு கொண்டுவரப்பட்டது.*

*முடிவற்ற தயாரிப்புகளுக்கு பின்னர் 'நியு ரெனிஷ் செய்தித்தாள்': அரசியல்-பொருளாதார பரிசீலனை' மார்ச் மாத துவக்கத்தில் 1850ல் 2500 பிரதிகளுடன் உதயமானது. இரண்டாவது இதழும் அதே மாதம் தொடர்ந்தது. நான்கு இதழ்கள் அந்த வருடத்திலேயே வெளியாயின.*

*மிக முக்கியமான முழுமையான கட்டுரைகள் மார்க்ஸ் ஏங்கல்ஸ் இடமிருந்து வந்தன. "பிரான்சின் 1848-50 வர்க்க போராட்டம்" என்ற அவரது கட்டுரையை அதில் வெளியிட்டார். ஏங்கல்ஸ் "ரெய்க்( ஜெர்மன் மொழியில் "அரசு/,நாடு") அரசியல் சாசனத்திற்கான ஜெர்மன் இயக்கம்" மற்றும் "ஜெர்மனியில் விவசாயிகள் போர்" என்ற கட்டுரைகளை அதில் எழுதினார். புரட்சியின் வீழ்ச்சியினால் பத்திரிக்கை கடும் நெருக்கடியை சந்தித்தது. எடுத்துக்காட்டாக,புரட்சிகர வெளியீடுகளுடன் ஒட்டும் இல்லை உறவும் இல்லை என புத்தக விற்பனையாளர்கள் ஒதுங்கிக் கொண்டார்கள்.*

*மிக மோசமான பின்னடைவுகளும், குருதி தோய்ந்த தோல்விகளும் கூட மக்கள் அதிலிருந்து படிப்பினையை கற்றுக் கொண்டால் ஒரு சாதகமான பக்கத்தைக் கொண்டதாக இருக்கும் என்ற பார்வையைக் கொண்டிருந்தார் மார்க்ஸ். புரட்சியின் படிப்பினைகளை ஆராய்ந்து அதனை பொதுமைப்படுத்துவதும், இரண்டு புரட்சிகர ஆண்டுகளின் அனுபவங்களை உழைக்கும் ஜனத்திரள்புரிந்து கொள்ள உதவுவதும் கம்யூனிஸ்ட் லீகின் உடனடி வேலை என எண்ணினார். இந்த பணியில் ஏங்கல்ஸுடன் தன்னையும் ஈடுபடுத்திக் கொண்டார். மார்ச் மாத இறுதியில் முடிவுகளை எடுத்து லீகின் மத்திய செயற்குழுவின் முன் கொணர்ந்தனர். "மார்ச் 1850 லீக்கிற்கு மத்திய குழுவின் முடிவுகள்" என்ற அந்த ஆவணத்தை மத்திய குழு*

அங்கீகரித்தது. அதனை ஜெர்மனி எடுத்து சென்று அங்கு ரகசியமாக செயல்படும் கம்யூனிஸ்ட்களுக்கு கொடுக்க வேண்டும் என அக் குழுவின் பொறுப்பு மிக்க உறுப்பினரான ஹென்றி பாயர் அவர்களை நியமித்தது.

நியாயமான பெருமிதத்துடன் மார்க்ஸும், ஏங்கல்ஸும் தங்களின் பேச்சின் துவக்கத்தில் புரட்சியின் வருடங்களில், லீக் இரு வழிகளில் தன்னை நிரூபித்துக் கொண்டது.என கூறினார்கள்: "……..முதலாவதாக பத்திரிக்கைகளில், தடைஅரண்களில் போர்க்களங்களில் என அதன் உறுப்பினர்கள் எல்லா இடத்திலும் உத்வேகத்தோடு இயக்கங்களில் பங்கேற்றார்கள். ஒரே உறுதி மிக்க புரட்சிகர வர்க்கமான தொழிலாளி வர்க்கத்தின் முன் வரிசையில் அவர்கள் நின்றார்கள். இயக்கத்தின் உருவாக்கத்தில் லீக் மேலும் தன்னைத்தானே நிரூபித்துக் கொண்டது……… மிகச் சரியான ஒன்று மட்டுமே ஆனதாக மாறியது.

குறிக்கோள் நிறைவேறவில்லை.

ஆனால் புரட்சி அதன் குறிக்கோளை நிறைவேற்றவில்லை. ஜெர்மனி ஒன்றிணைக்கப்படவுமில்லை. ஜனநாயக நாடாகவும் மாறவில்லை. இத் தோல்விக்கான பொறுப்பு பெரு முதலாளிகளையே சாரும் என மார்க்ஸும், ஏங்கல்ஸும் பிரகடனப் படுத்தினார்கள்.நிலப்பிரபுத்துவ ஆட்சியை தூக்கி எறிய வெகு மக்களை அழைத்து செல்வதற்கு மாறாக, முதலாளிகள் எதிர் புரட்சியாளர்களுடன் கூட்டு சேர்ந்து கொண்டனர். அதாவது அவர்களின் அப்போதைய இயல்பான நேச சக்திகளான தொழிலாளர்கள் விவசாயிகளுக்கெதிரான கூட்டில் சேர்ந்தனர். இதன் விளைவு, இறுதியில் அவர்கள் கையில் இருந்த அரசின் சுக்கானை அவர்கள் இழந்தார்கள்.

எதிர் வரும் புரட்சியில், இந்த பாத்திரம் குட்டி முதலாளிகளால் வகிக்கப்படும் என மார்க்ஸும், ஏங்க்ல்ஸும் எழுதினார்கள். எப்படி குட்டி முதலாளிகள் புரட்சியின் போதும்,குடி பெயர்ச்சியின் போதும், தொழிலாளி வர்க்கத்தை அதிகாரபூர்வ முதலாளித்துவ ஜனநாயகத்தின் தொங்குசதையாக மாற்றிட முயற்சித்தார்கள் என்பதை அவர்கள் சுட்டிக்காட்டினார்கள்.,- குட்டி முதலாளிகளும், தொழிலாளர்களும் அரசியல் ரீதியாக இணைவதை மார்க்சும் அவரது தோழர்களும் கடுமையாக எதிர்த்தனர். லீக், அதன் சக்தி அனைத்தையும் திரட்டி, ரகசியமாக,

சுயேட்சைத்தன்மையுடன் இயங்கும் பொது அமைப்பாக தொழிலாளர் கட்சியினை அமைக்க வேலை செய்ய வேண்டும் என அவர்கள் அறிவித்தனர். அத்தகைய கட்சி அதிகாரபூர்வமான ஜனநாயகவாதிகளுடன் இணந்து செயல்பட வேண்டும் என்பதும், ஒவ்வொரு அப்பகுதி லீக்கும் தொழிலாளர் அமைப்புகளின் மையமாகவும்,இதயமாகவும் இருக்க வேண்டும் எனவும், அத்தகைய நிலையில், முதலாளித்துவ தாக்கம் தவிர்த்த, தொழிலாளர்களின் நிலைப்பாடும், நலன் களும் குறித்து விவாதிக்கப்பட வேண்டும் எனவும் அறிவித்தார்கள்."

இத்தகைய தெளிவான நோக்கோடு, தொழிலாளர் நலனை ஆளும் வர்க்க நலன்களுக்கு அடி பணியச் செய்யும் அனைத்து சந்தர்ப்பவாத முயற்சிகளுக்கெதிராக ஐயத்திற்கிடமற்ற ஒரு போர் துவங்கப்பட்டது.

### கட்சியின் யுத்தம்

ஜெர்மனியில் லீக் அமைப்பு மீண்டும் தன்னை பலப்படுத்திக் கொண்டதை மத்திய செயலகத்திற்கு வரும் கடிதங்களிலிருந்தும், ஜெர்மனியிலிருந்து திரும்பியிருந்த ஹென்றி பாயரிடமிருந்தும், மார்க்ஸ் அறிந்து கொண்டார். பல பெரிய நகரங்களில் பகுதி அமைப்புக்கள் திரும்பவும் அமைக்கப்பட்டிருந்தன. ஏற்கனவே இருந்து வரும் தொழிலாளர் அமைப்புகளிடம், உடற்பயிற்சியாளர்களிடம், விவசாயிகளிடம்,மற்றும் பகல் நேர உழைப்பாளர்களிடம், தனிக்குழுக்களும், தனிநபர்களும் தங்களின் தாக்கத்தை நிறுவுவதில் வெற்றி அடைந்தது விசேட முக்கியத்துவமாகும்.

இந்த வளர்ச்சிப் போக்குகளின் அடிப்படையில், ஏங்கல்ஸுடன் சேர்ந்து லீகிற்கான மற்றொரு உரையை மத்திய செயலகம் முன் ஜூன் மாதம் வைக்கப்பட்டது. அந்த உரை தொழிலாளர் விவசாயிகளின் சட்ட பூர்வ அமைப்புக்களின் மீது மிகவும் நெருக்கமான கவனத்தை செலுத்துமாறு ஜெர்மன் கம்யூனிஸ்ட்களுக்கு அறைகூவல் விடுத்தது. மார்க்ஸ் தாமும் தம் உடனுழைப்பவர்களும் இந்த உத்தியை அமலாக்குவதிலுள்ள தர்க்க ரீதியான தொடர்ச்சியை1848-49 புரட்சியின் சமயத்தில் கண்டார். அது தேசீய புரட்சிகர தொழிலாளர் கட்சிக்கான போரில் மேலும் ஒரு வளர்ச்சி என்பதாகும்.

*தமது மார்ச் மாத உரையில் தமது முந்தைய உரையை இன்னும் விளக்கமாகவும் ஆழமாகவும் ஆற்றினார். அதாவது எதிர்கால புரட்சியில், தொழிலாளி வர்க்கம் முதலாளித்துவ-ஜனநாயக புரட்சியை படிப்படியாக தொழிலாள வர்க்க-சோசலிச புரட்சியாக மாற்ற வேண்டும் என்பதே. ஏனெனில் முதலாளித்துவ அமைப்பையும், தொழிலாளர்களின் கூலி அடிமை நிலையையும் தொடாமல் அப்படியே வைத்திருக்க குட்டி முதலாளிகள் அனைத்தையும் செய்வார்கள். "அனைத்து சிறிய பெரிய சொத்துடைய வர்க்கம் ஆட்சி அதிகாரத்திலிருந்து விரட்டப்படுவது வரையும்,தொழிலாளி வர்க்கம் அரசு அதிகாரத்தை கைப்பற்றுவது வரையும், புரட்சியை நிரந்தரமாக ஆக்கிடுவதென்பது" தொழிலாளி வர்க்க நலனிற்கே அவசியமானது*

*எவ்வாறாயினும் அதற்காக தொழிலாளி வர்க்கம் தன்னை தயார் செய்து கொண்டு, அதன் அதிகார அமைப்புக்களை, அதாவது புரட்சிகர தொழிலாளர் அரசுகளை, தேவையெனில் முதலாளித்துவ அரசிற்கு பக்கம் பக்கமாகவே கூட உருவாக்கிட வேண்டும்.. அதுதான் மார்க்ஸும், ஏங்கல்ஸும் தொழிலாளர்களுக்கு விடுத்த வேண்டுகோளாகும். பல பத்தாண்டுகளுக்கு பின்னர்,மாபெரும் அக்டோபர் சோசலிச புரட்சியின் தயாரிப்புகளிலும், அமலாக்கத்திலும், ஜனநாயக புரட்சியை, சோசலிச புரட்சியாக வளர்த்தெடுக்கும் நோக்கு மேலும் 20 ம் நூற்றாணடின் நிலைமைகளுக்கு ஏற்ப லெனினால் மேலும் மேம்படுத்தப்பட்டு ஒரு முக்கிய பங்காற்றப் போகிறது.*

*( இக்கட்டுரையானது, கார்ல் மார்க்ஸ் 200 என்ற பொது தலைப்பில் பீப்பிள்ஸ் டெமாக்ரசி இதழில் வெளியாகும் தொடர் கட்டுரையின் பகுதி. சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் மார்க்சிய லெனினிய கல்வி நிறுவனம் தயாரித்த 'கார்ல் மார்க்ஸ் கதையும் வாழ்க்கையும்: கார்ல் மார்க்ஸ் சரிதை' என்ற புத்தகத்தை அடிப்படையாக கொண்டு, 1983 ஆம் ஆண்டு, மார்க்சிஸ்ட் கட்சியின் அப்போதைய மத்திய குழு உறுப்பினர் ராம் தாஸ் தொகுத்தளித்தது. )*

## 4. சிங்காரவேலர் : நகரசபை உறுப்பினராக மக்கள் பணிகள்

*உதயகுமார்*

*இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தின் மூலவரான சிந்தனைச் சிற்பி சிங்காரவேலர், இந்திய கம்யூனிஸ்ட் தலைவர்களில் ஒருவராக உலக அளவில் அன்றே போற்றப்பட்டவர்.*

*கான்பூரில் 1925 இல் நடைபெற்ற இந்திய பொதுவுடமைக் கட்சி மாநாட்டிற்கு தலைமையேற்று நடத்தியவர் என்ற பெருமையும் உண்டு. சர்வதேச தொழிலாளர் அமைப்புடன் தொடர்புடைய சர்வதேச கம்யூனிஸ்ட் இயக்க தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பும் கொண்டிருந்த சிங்காரவேலர் எந்த ஒரு பொறுப்பையும் தீவிர கொள்கை பிடிப்புடனும் சமரசமற்ற முறையிலும் நிறைவேற்றி வந்தார் என்பது தனிச்சிறப்பாகும்.*

*ஈ.வே.ரா பெரியார் போன்ற தலைவர்களுடன் மிக நெருக்கமாக இருந்தபோதிலும் தனது கம்யூனிஸ்ட் கொள்கைக்கு சிறிதேனும் பங்கம் வருவதாய் இருந்தால் காந்தி உள்ளிட்ட எவ்வளவு பெரிய தலைவர்களையும், நண்பர்களையும் உதறித் தள்ளிவிடுவார் என்பது அவரது வரலாற்றை படிப்போர் அறிய முடியும்.*

*1925 ஆம் ஆண்டு சுயராஜ்ஜிய கட்சி சார்பில் சென்னை மாநகராட்சி தேர்தலில் யானைகவுனி வட்டத்தொகுதியில் நீதிக்கட்சியில் அன்று மிகவும் பிரபலமாக விளங்கிய மதனகோபால் நாயுடு என்பவரை தோற்கடித்து வெற்றி பெற்றார். இந்த தொகுதி அவர் சார்ந்த மீனவ சமுதாய மக்கள் எவரும் இல்லாத தொகுதி குறிப்பிடத்தக்கது.*

*சென்னை நகரசபை உறுப்பினராக தேர்வு செய்யப்பட்ட சிங்காரவேலர், அந்நாளில் ஆங்கிலப் புலமை மிகுந்த பேச்சாளர்களில் ஒருவராக இருந்தபோதிலும் தனது துவக்க பேச்சை தமிழிலேயே ஆற்றினார் என்பது அவரின் தமிழ் பற்றை பறைசாற்றுகிறது.*

*இன்றும் சட்ட சபைகளிலும், நகர்மன்றங்களிலும் முதல்வர்களையும்,*

மேயர்களையும் பாராட்டுவதற்காக அதிக நேரம் எடுத்துக் கொள்வதை பார்க்கிறோம். அன்றும் இந்த நிலை இருந்தது என்றே தோன்றுகிறது. எனவே தான் தனது பேச்சில் "நகரசபை உறுப்பினர்கள் நகரசபை நடவடிக்கையின் போது ஒருவரை ஒருவர் பாராட்டிக்கொண்டு நேரத்தைப் பாழாக்குவதற்கு பதிலாக நகர சுகாதார மேம்பாட்டிற்கு உழைக்கலாம். நகரசபையின் இப்போதைய முதற் கடமை நகரத்தின் சாக்கடை மற்றும் பொது சுகாதாரத்தை பற்றி கவலைப்படுவதுதான். இன்றுள்ள வசதிகள் நகரத்திற்கு போதும் என்பதை நான் ஒத்துக்கொள்ள மாட்டேன். நகரசபை நிர்வாகம் மோசமாக இருக்கிறது நகரத்தின் இறப்பு விகிதம் மோசமாக இருக்கிறது. நகரத்தின் இறப்பு விகிதம் ஐரோப்பா அல்லது அமெரிக்காவுடன் ஒப்பிட்டால் மிக அதிகமாகும். இனி பிறக்கும் ஒரு சிசுவும் இறக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

அன்று மாநகராட்சி கட்டடத்தின் முன்பாக பிரிட்டிஷ் அரசு அழகுணர்ச்சியின் பேரால் பீரங்கிகளை நிறுத்தியிருந்தது அவை போர் உணர்ச்சியைத் தூண்டுகின்றன என்பதால் அவற்றை நீக்க வேண்டும் என்று சிங்காரவேலர் தீர்மானம் கொண்டு வந்தார். அன்றைக்கு கர்னல் நீல் என்ற பிரிட்டன் படைப்பிரிவின் தளபதியாக இருந்த கொடுங்கோலன் சிலையை அகற்ற வேண்டுமென போராடினார்.

சிங்காரவேலர் தாம் வகித்த வசித்த நகரசபை உறுப்பினர் பொறுப்பை பயன்படுத்தி மக்கள் நலப் பணிகளை உவப்புடன் ஆற்றினார். அவராற்றிய பணிகள் கட்சிகளை இணைத்தல், நகரச் சுத்தம், கல்வி வளர்ச்சிப்பணிகள், கடல் குளிப்போர் பாதுகாப்பு, சூதாட்ட தடுப்பு என பன்முகத் தன்மை கொண்டதாக இருந்தது.

சிங்காரவேலர் ஏழைகளின் வீடுகளுக்கும் மருத்துவர்கள் சென்று மருத்துவ பரிசோதனை செய்ய வேண்டுமென்றார். தொற்று நோய் தடுப்புக்காக சானிடரி ஆய்வாளர்களை நியமிக்க அதிக நிதி ஒதுக்கீடு செய்ய வேண்டுமென வற்புறுத்தினார். சிங்காரவேலர் சமுதாயப் பணியுணர்வையும் விழிப்புணர்வையும் தருவதில் கல்வியே அடிப்படையாக அமைகிறது என்று கருதினார்.

மாநகராட்சி பள்ளிகளை அதிக அளவில் திறக்க வாதாடினார். இவர் கல்விக் குழுவில் பொறுப்பேற்றிருந்த காலத்தில்தான் ஏழைக் குழந்தைகளுக்கு நகராட்சியின் பொறுப்பில் இலவச உணவு வழங்க ஏற்பாடு செய்தார். காமராஜர் பள்ளிகளில் ஏழைகளுக்கு மதிய உணவு திட்ட்டம் வழங்குவதற்கு 50 ஆண்டுகளுக்கு

முன் முன்பாகவே சிங்காரவேலர் சென்னை மாநகராட்சி இலவச உணவு திட்டத்தை அறிமுகப்படுத்தினார் என்பது குறிப்பிடத்தக்கது. கடலில் குளிப்போர் பாதுகாப்பிற்காக சென்னை திருவல்லிக்கேணி கடற்கரையில் ஓர் இயங்கு மருந்தக ஊர்தியும், உயர் நீதிமன்றக் கடற்கரையில் ஓர் இயங்கு மருந்தக ஊர்தியும் சிங்காரவேலரின் முன் முயற்சியால் நிறுவப்பட்டது.

சுயராஜ்ஜிய கட்சியின் சார்பில் சிங்காரவேலர் நகராட்சி உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட்ட போதிலும் நகர் மன்றக் கூட்டத்தில் இவர் தம்மை ஒரு பொதுவுடமைச் சார்பாளராகவே அறிமுகப்படுத்திக் கொண்டார். நகரசபையில் கடும் எதிர்ப்புக்கு மத்தியில் பொதுவுடமை இயக்கத்தைச் சார்ந்த சக்லத் வாலாவை வரவேற்க ஏற்பாடு செய்தார், கம்யூனிஸ்டுகளை இழிவுபடுத்த 'மாஸ்கோ ராஸ்கல்' என்றழைத்த போது அதனை ஏற்றுக்கொண்டு தாம் பொதுவுடமை சார்பாளர்தான் என்று அச்சமின்றி வெளிப்படையாகவே பறை சாற்றிக்கொண்டார்.

மக்கள் பணியையும், பொதுவுடமை கொள்கைகளையும் முன் வைத்தே சிங்காரவேலர் இயங்கி வந்ததை அவரின் வாழ்வின் நடவடிக்கைகள் நமக்கு புலப்படுத்துகின்றன

# 5. மோடி அரசின் மோசடி பட்ஜெட் 2019

*வெங்கடேஷ் ஆத்ரேயா*

*பாஜக தலைமையிலான மத்திய அரசு இன்னும் இரண்டே மாதங்களில் காலாவதியாக உள்ளது. இந்த நிலையில் தேர்தல் நடந்து புதிய அரசாங்கம் அமையும் வரையிலான, வரும் 2019-20 நிதியாண்டின் முதல் மூன்று மாதங்கள் வரை, அரசு நடத்துவதற்கான வரவு செலவு திட்டம் முன்வைக்க மட்டுமே இந்த அரசுக்கு அதிகாரம் உண்டு. இதனை ஏற்று, நடப்பு பாராளுமன்ற கூட்டத்தொடரில் இடைக்கால பட்ஜெட் மட்டுமே சமர்ப்பிக்க உள்ளோம் என்று வாக்குறுதி அளித்துவிட்டு, பின்னர் அதை மீறி 2019-20 நிதி ஆண்டிற்கான முழு பட்ஜெட்டை மத்திய அரசின் சார்பாக பொறுப்பு நிதி அமைச்சர் பியூஷ் கோயல் சமர்ப்பித்துள்ளார். நடப்பு ஆண்டிற்கான வரவு செலவு திட்டத்திலும் மாற்றங்களை செய்துள்ளார். கொடுத்த வாக்குறுதிகளை மீறுவதும் அவற்றை செயல்படுத்த மறுப்பதும் பாஜகவிற்குப் புதிதல்ல.*

## *இருபெரும் பிரச்சினைகள்*

*இன்று இந்திய மக்கள் எதிர்கொள்ளும் இருபெரும் பொருளாதார பிரச்சினைகள் தொடரும் தீவிர வேளாண் நெருக்கடியும் கடுமையான வேலையின்மையும் ஆகும். இவை பற்றி பட்ஜெட் என்ன சொல்லுகிறது? கடந்த இரண்டு ஆண்டுகளாக பாஜக செல்வாக்கு பரவலாக உள்ள சில வட இந்திய மாநிலங்கள் உட்பட நாடு முழுவதும் இரு முக்கிய கோரிக்கைகளை முன்வைத்து அகில இந்திய விவசாய சங்கம் எழுச்சிமிக்க மக்கள்திரள் போராட்டங்களை நடத்தி வந்துள்ளது. 200க்கும் மேற்பட்ட விவசாய சங்கங்கள் ஒன்றிணைந்து தில்லியில் வரலாறு காணாத பேரணியை நடத்தின. ஐந்து வட மாநிலங்களில் பாஜக அரசுகள் தூக்கி எறியப்பட்டன. விவசாயிகள் முன்வைத்த இருமுக்கிய கோரிக்கைகளில் ஒன்று கடன் ரத்து, மற்றொன்று வேளாண் விளைபொருட்களுக்கு பேராசிரியர் சுவாமிநாதன் தலைமையிலான தேசிய விவசாயிகள் ஆணையம் பரிந்துரைத்த சூத்திரத்தின் அடிப்படையிலான விலையில் அரசு கொள்முதல். கடன் ரத்து கோரிக்கையை மத்திய அரசு பட்ஜெட் உரை முற்றிலும் புறக்கணித்து உள்ளது.*

விளைபொருள் கொள்முதல் விலை பற்றி முற்றிலும் தவறான தகவலை பட்ஜெட் உரை முன்வைக்கிறது. விவசாயிகள் வெளிப்படையான செலவுடன் அவர்களது உழைப்புக்கு பணமதிப்பு கணக்கிட்டு, நிலவாடகைக்கும் கணக்கிட்டு, விவசாயிகள் போட்டுள்ள முதலுக்கான வட்டியையும் கணக்கிட்டு இவற்றை கூட்டி கிடைக்கும் தொகையுடன் அதில் பாதி அளவை சேர்த்து வரும் தொகை தான் சுவாமிநாதன் ஆணையம் பரிந்துரைக்கும் கொள்முதல் விலை. இதை கொடுக்கிறோம் என்று 2014 தேர்தல் பிரச்சாரத்தில் பாஜக வாக்குறுதி அளித்தது. ஆனால் ஆட்சிக்கு வந்தவுடன் உச்சநீதி மன்றத்தில் இது இயலாது என்று அறிவித்தது பாஜக அரசு. பின்னர் கடந்த இரண்டு ஆண்டுகளின் விவசாயப் பேரெழுச்சிக்குப்பின் சுவாமிநாதன் ஆணையம் பரிந்துரை அடிப்படையில் கொள்முதல் விலை கொடுத்துவிட்டோம் என்று பட்ஜெட் உரையில் கூறப்பட்டுள்ளது. இது முற்றிலும் தவறான தகவல் ஆகும். உண்மையில் நிலவாடகை, முதலுக்கான வட்டி ஆகியவை அரசு சொல்லும் விலையில் இடம் பெறவில்லை.

இப்படி உண்மைகளை மறைத்துக்கொண்டே, இரண்டு ஹெக்டேருக்கு குறைவாக நிலம் உள்ள விவசாயிகளுக்கு ஆண்டுக்கு 6000 ரூபாய் நேரடியாக வழங்கப்படும் என்று அறிவித்துள்ளார் நிதி அமைச்சர். நடப்பு ஆண்டில் இருந்தே இத்திட்டம் துவங்கும் என்றும் நடப்பு ஆண்டில் இதற்கென ரூபாய் 20,000 கோடி ஒதுக்கீடு செய்துள்ளதாகவும் அமைச்சர் கூறியுள்ளார். இது விவசாயிகளுக்கு அரசு அளிக்கும் மாபெரும் வரம் என்ற பாணியில் ஆளும் கட்சி ஆசாமிகள் பிரச்சாரம் செய்கின்றனர். உண்மை என்ன? பயன்பெற தகுதியுள்ள குடும்பங்களை முதலில் எடுத்துக்கொள்வோம். ஆண்டுக்கு 6000 ரூபாய் என்றால் மாதம் 500 ரூ. தினசரி என்று பார்த்தால் ஒரு குடும்பத்திற்கு 17 ரூபாய்க்கும் குறைவு. ஐந்து உறுப்பினர் கொண்ட குடும்பத்திற்கு நபர் ஒருவருக்கு ரூபாய் 4 க்கும் குறைவு. இதையா விவசாயிகள் கேட்டார்கள்?

கட்டுபடியாகும் விளைபொருள் விலை, கடன் ரத்து, நிலச்சீர்திருத்தம், விவசாயத்தொழிலாளர்களுக்கு நியாயம் வழங்குதல், வேளாண் துறைக்கான கட்டமைப்பு வசதிகளை மேம்படுத்தல், வேளாண் விரிவாக்க அமைப்பையும் ஆராய்ச்சி அமைப்பையும் வலுப்படுத்துவது என்பதையெல்லாம் ஆட்சிக்காலம் முழுவதும் புறக்கணித்து விட்டு, விவசாயிகளை கேவலப்படுத்தும் வகையில்

2 ஹெக்டேர் மற்றும் அதற்குக் குறைவாக நிலம் உள்ள விவசாயிகளுக்கு நாளொன்றிற்கு நபர் ஒருவருக்கு ரூபாய் 3 சொச்சம் தரும் "திட்டத்தை" விவசாயிகளுக்கு வரப்ரசாதம் என்பதுபோல் பட்ஜெட்டில் அறிவித்திருப்பது வெந்தபுண்ணில் வேல் பாய்ச்சும் வகையில் அமைந்துள்ளது.

இதுமட்டுமல்ல. இந்த சலுகை கூட நிலத்தில் பாடுபடும் அனைவருக்கும் கிடைக்காது. குத்தகை விவசாயிகளுக்கு இத்தொகை கிடையாது. நில உடமையாளருக்குத்தான். மேலும் பாசனம் பெறும் நிலம் பாசனம், இல்லாத நிலம் என்று வேறுபடுத்தாமல் 2 ஹெக்டேர் என்ற வரம்பு போடப்பட்டுள்ளது. களத்தில் நில உடமை பதிவு ஆவணங்கள் முறையாக சமகாலப்படுத்தப்படாத நிலையில், திட்டத்தின் பயன் ஓரளவு நிலபலம் உள்ள பகுதியினருக்கே கிடைக்கும். ஏழை விவசாயிகளுக்கு மிகக்குறைந்த பயன் தான் இருக்கும். விவசாய நெருக்கடியின் கடுமையான தாக்கத்திற்கு உள்ளாகியிருக்கும் விவசாயத்தொழிலாளிகளுக்கு இத்திட்டம் எந்தவகையிலும் பயன் அளிக்காது.

ஏற்கெனவே மத்திய அரசின் திட்டத்தைவிட மேம்பட்ட பணப்பயன் அளிக்கும் திட்டங்களை தெலுங்கானா அமலாக்கி வருகிறது. ஒதிசா மாநில அரசும் தெலுங்கானா திட்டத்தைவிட பணப்பயன் குறைவு என்றாலும் மத்திய அரசைவிட அதிகமான பணப்பயன் தரும் திட்டத்தை அறிமுகப்படுத்தியுள்ளது. இந்த முதலாளித்துவ மாநில அரசுகளின் திட்டங்களும் வேளாண் நெருக்கடிக்கு தீர்வுகாணும் தன்மையிலான திட்டங்கள் அல்ல. எனினும் மத்திய அரசின் அப்பட்டமாக அரசுபணத்தை பயன்படுத்தி தேர்தல் நெருக்கத்தில் வாக்குக்கு காசுதரும் தன்மையிலான லஞ்ச நடவடிக்கைபோன்று அவை இல்லை.

### வேலையின்மை பிரச்சினை

2014 தேர்தல் பிரச்சாரத்தில் நரேந்திர மோடியும் பாஜகவும் மீண்டும் மீண்டும் கொடுத்த வாக்குறுதி ஆண்டுக்கு ஒருகோடிக்கும் அதிகமாக புதிய பணியிடங்களை உருவாக்குவது என்பதாகும். ஆனால் நிகழ்ந்துள்ளது என்ன?

கடந்த நாற்பது ஆண்டுகளுக்கும் மேலாக, இந்திய அரசின் நிறுவனமான தேசிய மாதிரி ஆய்வு அமைப்பு (National Sample Survey Organization-NSSO) ஐந்து

ஆண்டுகளுக்கு ஒருமுறை, மிக அதிக எண்ணிக்கையில் குடும்பங்களை அறிவியல் பூர்வ அடிப்படையில் தேர்வு செய்து தேச அளவில் வேலையில் உள்ளவர், வேலை தேடுவோர், உழைப்பு படையில் இல்லாதவர் என்று மக்களை வகைப்படுத்தி ஆய்வு செய்துவருகிறது. இதன்படி 2011-12 முழு ஆய்வு நடந்தது. பின்னர் 2016-17இல் நடந்திருக்கவேண்டும். ஆனால் அப்படி நடந்தால் மோடி அரசின் பணமதிப்பிழப்பு நடவடிக்கையால் பொருளாதாரத்தில் ஏற்பட்ட பெரும் சேதம் வேலையின்மையை மிகக்கடுமையாக ஆக்கியிருப்பது அம்பலமாகிவிடும் என்ற அச்சத்தில் மோடி அரசு அந்த ஆண்டில் ஆய்வு நடத்த அனுமதிக்கவில்லை.

பின்னர் இந்த ஆய்வு 2o17-18 ஆண்டை அடிப்படையாகக்கொண்டு தேசிய மாதிரி ஆய்வு அமைப்பால் நடத்தப்பட்டுள்ளது. இந்த ஆய்வு ஜூலை 2018 முடிக்கப்பட்டு, அதன் அறிக்கை டிசம்பர் மாதம் சம்பந்தப்பட்ட அதிகாரபூர்வ குழுவால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால் தொடர்ந்து இந்த அறிக்கையை வெளியிட மத்திய அரசு நடவடிக்கை எடுக்கவில்லை. இதனை எதிர்த்து தேசிய புள்ளியியல் ஆணையத்தின் இரு உறுப்பினர்கள் ராஜினாமா செய்தனர் என்பது ஊரறிந்த செய்தி. மத்திய அரசுக்கு இந்த அறிக்கையை வெளியிட விரும்பாமல் இருப்பதற்கு முக்கிய காரணம் இந்த அறிக்கை வேலையின்மை நிலைமை எப்பொழுதும் இல்லாத அளவிற்கு மோசமாகியுள்ளதை தெளிவாக்குகிறது. 1972-73 முதல் தேசிய மாதிரி ஆய்வு அமைப்பு தொடர்ந்து நடத்திவந்துள்ள முழு சுற்று ஆய்வுகளில் (1972-73, 1977-78, 1983, 1987-88, 1993-94, 1999-2000, 2004-05, 2009-10, 2011-12, 2017-18) மிக அதிகமான வேலையின்மை விகிதம் 2017-18 சுற்றில் தான் நிகழ்ந்துள்ளது.

இங்கே ஒரு விஷயத்தை தெளிவுபடுத்த வேண்டும். இந்திய நாட்டில் உழைப்பாளி மக்களுக்கு சமூக வாழ்வாதார பாதுகாப்பு மிகக் குறைவு. எனவே முழுமையாக வேலை செய்யாமல் இருப்பவர்கள் குறைவாகவே இருப்பார்கள். (செல்வந்தர்கள் மட்டுமே வேலை செய்யாமல் வாழ முடியும்! ஏழைகளுக்கும் உழைக்கும் மக்களுக்கும் அந்த வாய்ப்பு கிடையாது!!) ஏதோ ஒருவேலையில் (சுயவேலை, கூலிவேலை) – மிகக்குறைவான ஊதியமோ வருமானமோ கிடைத்தாலும் – இருந்தே ஆகவேண்டும். வேலையில்லா ஏழைகளுக்கு உணவு, உடை, உறைவிடம் எதற்கும் எந்த உத்தரவாதமும் கிடையாது. எனவே ஆய்வுகளில் கிடைக்கும் வேலையின்மை விகிதம் உண்மையான வேலையின்மை அளவையும்

மிகவும் குறைத்து மதிப்பிடுகிறது.

வேலையில் இருப்பதாக கருதப்படுவோரின் மோசமான பணி நிலைமைகள் பற்றிய விவரங்களும் இத்தகைய ஆய்வுகளில் பெருமளவிற்கு கிடைப்பதில்லை. மேலும் இந்திய உழைப்புப்படையில் சரிபாதிக்கும் சற்று அதிகமானவர்கள் சுயவேலை செய்பவர்கள். இவர்கள் கணிசமான நேரம் வேலையின்றியே உள்ளனர். உதாரணமாக, இரண்டு ஏக்கர் அல்லது அதற்கு குறைவான நிலம் உள்ள விவசாயக் குடும்பத்தில் உழைக்கும் வயதிலான குடும்ப உறுப்பினர் அனைவருக்கும் வருடம் முழுவதும் வேலை இருக்க வாய்ப்பே இல்லை. பகுதிநேர வேலையின்மை என்பது – பொருளாதார அறிஞர்கள் இதனை 'மறைமுக வேலையின்மை' என்று அழைக்கிறார்கள். – நமது நாட்டில் நிலவும் சமூக பொருளாதார அமைப்பின் ஒரு மிகப்பெரிய கேடு.

இதையெல்லாம் நாம் புரிந்து கொள்வது அவசியம் என்பது ஒருபுறம். மறுபுறம், அரசு வெளியிட மறுத்த தேசிய மாதிரி ஆய்வு 2017-18 அறிக்கை – ஊடகம் ஒன்றின் முயற்சியால் பொதுவெளிக்கு வந்துள்ள அறிக்கை – தரும் விவரமும் மிக முக்கியமானது. நமது நாட்டில் கடந்த ஐந்து ஆண்டுகளில் – பாஜக ஆட்சியில் – வேலையின்மை பிரச்சினை பூதாகாரமாக அதிகரித்துள்ளது என்பதை அறிக்கை விவரங்கள் தெளிவுபடுத்துகின்றன. வேலையின்மை பற்றிய 2011-12 ஆய்வு விவரங்களையும் 2017-18 ஆய்வு விவரங்களையும் ஒப்பிட்டால் வேலையின்மை மூன்று மடங்கு அதிகரித்துள்ளது என்று தெளிவாகத் தெரிகிறது. தேசிய மாதிரிஆய்வு அமைப்பின் அறிக்கை மட்டுமல்ல. இந்திய பொருளாதாரத்தை கண்காணிக்கும் மையம் ( Centre for Monitoring Indian Economy – CMIE) தரும் விவரங்களின்படி, நவம்பர் 2017 முதல் நவம்பர் 2018 வரையிலான ஒரு ஆண்டில் வேலையில் உள்ளவர் எண்ணிக்கை ஒரு கோடியே பத்து லட்சம் குறைந்துள்ளது என்பது தெரிகிறது.

எனவே வேலையின்மை பிரச்சினை பாஜக ஆட்சி அமலாக்கிவரும் கொள்கைகளால் மிகவும் கூர்மையாகியுள்ளது. இதில் பொதுவான தாராளமய கொள்கைகளின் தாக்கம் மட்டுமல்ல, பணமதிப்பிழப்பு நடவடிக்கையும் மிகுந்த குழப்பங்களுடன் அவசரகோலமாக திணிக்கப்பட்ட சேவை மற்றும் சரக்குவரி – ஜிஎஸ்டி – அமலாக்கமும் முக்கிய பங்கு ஆற்றியுள்ளன. இவ்விரு நடவடிக்கைகளும்

பொதுவாக பொருளாதார வளர்ச்சியைப் பாதித்தது மட்டுமின்றி குறிப்பாக விவசாயம், சிறு குறுதொழில்கள் உள்ளிட்ட முறைசாராத்துறைகளை பெரிதும் பாதித்துள்ளன. வேலையின்மையை கடுமையாக தீவிரப்படுத்தியுள்ளன.

### தொடரும் மக்கள் விரோத வரி கொள்கை

மேலே விவரிக்கப்பட்டுள்ள இருபெரும் பிரச்சினைகளைப் பற்றி எந்த நடவடிக்கையையும் ஆலோசனைகளையும் பட்ஜெட் முன்வைக்கவில்லை. அதற்கு மாறாக தேர்தல் நோக்கிலான பட்ஜெட் முன்மொழிவையே நாம் காண்கிறோம். 12 கோடி விவசாயிகள் குடும்பங்களுக்கு நேரடி பணம் பட்டுவாடா என்பது அப்பட்டமாக மக்களின் வாக்குகளை விலைக்கு வாங்கும் முயற்சி. அதேபோல் தான் தனிநபர் வருமான வரி தொடர்பான சலுகைகளும். இவற்றால் பயன் அடைவோருக்கு கிடைக்கும் பணப்பயன் குறைவாகவே இருக்கும். ஆனால் பேரோசையை இவை ஏற்படுத்தும் என்று பாஜக நம்புகிறது. இதிலும் தில்லுமுல்லு உள்ளது.

2014 தேர்தல் பிரச்சாரத்தில் பாஜக ஆட்சிக்கு வந்தால் தனிநபர் வருமான வரி வரம்பை ஆண்டுக்கு 3 லட்சம் என்பதிலிருந்து 5 லட்சம் ஆக்குவோம் என்று அருண் ஜெயிட்லி ட்வீட் செய்தார்.மேடைக்கு மேடை பேசினார். ஆனால் கடந்த நான்கு ஆண்டுகளில் செய்யவில்லை. இந்த ஆண்டும் செய்யவில்லை. வருமானவரிக்கு உள்ளாகும் வருமானம் ஐந்துலட்சம் அல்லது அதற்குக் குறைவாக இருந்தால் செலுத்தவேண்டிய வரிக்கு முழு ரிபேட் அளிக்கப்படும் என்று மட்டுமே பட்ஜெட் முன்மொழிவு கூறுகிறது. வருமான வரி வரம்பு உயர்த்தப்படவில்லை. இது ஒருபுறம் இருக்க, தனிநபர் வருமான வரி தொடர்பான மாற்றங்களை இடைக்கால பட்ஜெட்டில் கொண்டு வருவது என்பதே நெறிமுறைகளை மீறுவதாகும். இதில் மேலும் கவனிக்க வேண்டியது தனிநபர் வருமான வரி மற்றும் இதர நேர்முக வரி சலுகைகளால் அரசுக்கு ஏற்படும் வரி வருமான இழப்பு சுமார் 22 ஆயிரம் கோடி ரூபாய் என்று பட்ஜெட் விவரங்கள் தெரிவிக்கின்றன.

கார்ப்பரேட் நிறுவனங்களைப் பொருத்தவரையில் சென்ற பட்ஜெட்டிலேயே அவர்கள் மீதான வரிவிகிதம் குறைக்கப்பட்டுவிட்டது. வரிவிலக்கு ஷரத்துகள் தொடர்கின்றன. மேலும் சொத்துவரி பாஜக ஆட்சியால் முற்றிலும்

*நீக்கப்பட்டுவிட்டது. வாரிசுவரி கிடையாது. மறுபுறம் பாஜக ஆட்சியில் ஆண்டு தோறும் மறைமுகவரிகள் ஏற்றப்பட்டுவந்துள்ளன. தனது முதல் நான்கு பட்ஜெட்டுகளில் கச்சா எண்ணய் மீதான கலால் வரி உயர்வுகள் மூலம் மட்டுமே ஒவ்வொரு ஆண்டும் முந்தைய ஆண்டைவிட கிட்டத்தட்ட ஒரு லட்சம் கோடி ரூபாய் மக்களிடம் இருந்து வசூலிக்கப்பட்டுள்ளது. தனது ஐந்து பட்ஜெட்டுகளிலும் இந்த பட்ஜெட்டிலும் பாஜக தொடர்ந்து செல்வந்தர்கள் மீதான வரிச்சுமையை குறைத்து சராசரி உழைப்பாளி மக்கள் மீதான வரிச்சுமையை உயர்த்தியுள்ளது. இந்தியாவில், மொத்த குடும்ப சொத்துமதிப்பில் மேல்மட்ட 1% குடும்பங்கள் கையில் 63% க்கும் அதிகமாக உள்ளது என்ற விவரம் இந்தியாவில் நிலவும் பிரம்மாண்டமான சொத்து மற்றும் வருமான ஏற்றத்தாழ்வுகளை நமக்கு உணர்த்துகிறது.*

*இப்படிப்பட்ட நாட்டில் சொத்துவரியும் வாரிசுவரியும் இல்லை என்பது அரசின் கொள்கைகள் மீது செல்வந்தர்கள் செலுத்தும் செல்வாக்கை காட்டுகிறது. அதேபோல், தனி நபர் வரி வருமான விகிதம் (30% + சர்ச்சார்ஜ்) கார்ப்பரேட் நிறுவனங்களின் மீதான வரி விகிதத்தை விட அதிகமாக உள்ளது. ஆண்டுக்கு ரூபாய் 250 கோடிக்கு குறைவாக விற்பனை மதிப்பு கொண்ட கார்ப்பரேட் நிறுவனங்கள் மீதான வருமான வரிவிகிதம் 30% இல் இருந்து 25% ஆக சென்ற ஆண்டு பட்ஜெட்டில் ஆக்கப்பட்டது. ஆக, பெரும் செல்வந்தர்களும் பெரும் கம்பனிகளும் இந்திய அரசின் வரவு செலவு கொள்கை உட்பட அரசின் பொருளாதார கொள்கைகளை தீர்மானிக்கின்றனர் என்பதை நாம் புரிந்துகொள்ளலாம்.*

### பட்ஜெட்டின் ஒதுக்கீடுகள்

*விவசாயிகளுக்கும் ஏழை மக்களுக்கும் வாரி வழங்கி விட்டதாக தம்பட்டம் அடித்துக்கொள்ளும் மத்திய அரசின் மக்கள் நலன் சார்ந்த துறைகளுக்கும் திட்டங்களுக்குமான ஒதுக்கீடுகள் அதிகரிக்கப்படவில்லை. மொத்த பட்ஜெட்டில் தொடர்ந்து சொற்பமாகவே அவை உள்ளன. கிராமப்புற உழைப்பாளி மக்களுக்கு மிகவும் அவசியமான, வேலை பெறுவதை சட்ட பூர்வ உரிமையாக்கிய வேலை உறுதி சட்டத்தின் அடிப்படையில் மன்ரேகா அல்லது ரேகா அல்லது நூறுநாள் திட்டம் என்று அழைக்கப்படும் ஊரக வேலை உறுதி திட்டம் 2006 இல் இருந்து*

அமலில் உள்ளது. இடதுசாரி இயக்கங்களும் சில சிவில் சமூக அமைப்புகளும் முதலாம் ஐக்கிய முற்போக்கு கூட்டணி அரசுக்கு கொடுத்த நிர்ப்பந்தத்தினால் தான் ரேகா சட்டம் வந்தது.

இச்சட்டத்தின்படி விருப்பம் தெரிவிக்கின்ற ஒவ்வொரு கிராமப்புற குடும்பத்திற்கும் ஒரு ஆண்டில் 100 நாட்கள் வேலையை அரசு கொடுக்கவேண்டும். இதன்மூலம் கிராமப்புற ஏழை உழைப்பாளி மக்களுக்கு வேலையும் அதன் மூலம் வருமானமும் கிடைக்கும். ரேகா பணிகள் மூலம் கிராமங்களில் பாசனம் உள்ளிட்ட உற்பத்தி சொத்துக்கள் உருவாக்கப்படும். இந்த அருமையான திட்டத்தை கடந்த ஐந்து ஆண்டுகளில் பாஜக அரசு சின்னாபின்னமாக்கி அழிக்க முற்பட்டுவருகிறது. வேலை நாட்களை குறைத்துள்ளது. நிதி ஒதுக்கீடுகளை கடுமையாக வெட்டியுள்ளது.

எடுத்துக்காட்டாக, நடப்பு நிதி ஆண்டில் ரேகாவிற்கான ஒதுக்கீடு (திருத்தப்பட்ட மதிப்பீடு) 61,084 கோடி ரூபாய். ஆனால் இந்த ஆண்டு இடைக்கால பட்ஜெட் வரும் நிதி ஆண்டிற்கு ரேகாவிற்கு ரூ 60,000 கோடி தான் ஒதுக்கியுள்ளது. துவக்கத்தில் இருந்த மாதிரி ரேகா திட்டத்திற்கு பொருத்தமான ஒதுக்கீடு செய்வதாக இருந்தால் அது இத்தொகையைப்போல் இரண்டு மடங்கு இருக்க வேண்டும். ரேகாவில் உழைத்துள்ள மக்களுக்கு வர வேண்டிய கூலி பாக்கித்தொகை பல ஆயிரம் கோடி ரூபாய்களை தாண்டிவிட்டது. உண்மையில், பாஜக அரசு இந்த திட்டத்தை மூடி விடும் நோக்கில் உள்ளது. ஊரக உழைப்பாளி மக்களின் கடும் களப்போராட்டங்கள் நடத்தி இத்திட்டத்திற்கான ஒதுக்கீட்டை பெரிதும் உயர்த்துவது அவசியம். ரேகா திட்டத்தில் பயன்பெறுவோரில் கணிசமானவர்கள் சிறு குறு விவசாயிகள், குறிப்பாக பெண்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

வேறுபல மக்கள் நலன் சார்ந்த திட்டங்களுக்கும் ஒதுக்கீடு குறைக்கப்பட்டுள்ளது அல்லது மிகவும் சொற்ப அளவில் உயர்த்தப்பட்டுள்ளது. ஆரோக்கியம் மற்றும் கல்வித் துறை சார்ந்த திட்டங்களின் ஒதுக்கீடுகளில் நாம் இதைக்காண முடிகிறது. கடந்த ஆண்டும் மொத்த திருத்தப்பட்ட மதிப்பீடை விட மிகவும் சொற்பமாகவே வரும் ஆண்டுக்கான அரசின் ஒதுக்கீடுகள் உயர்த்தப்பட்டுள்ளன. விவசாயிகளின் வாக்குகளை குறிவைத்து நேரடி பண பட்டுவாடா திட்டத்திற்கு ஒதுக்கப்பட்டுள்ள ரூ 20,000 கோடி ரூ என்பதன்

பெரும்பகுதி இவ்வாறு பிற திட்டங்களை வெட்டி கணக்கில் வந்துள்ளது.

வளங்களை திரட்டுதல் ஒருபட்ஜெட்டின் முக்கிய அம்சம் மக்கள் நலனுக்காக வகுக்கப்படும் திட்டங்களுக்கு உரிய ஒதுக்கீடுகளை செய்திட பொருத்தமான முறையில் அரசு வளங்களை திரட்ட வேண்டும் என்பதாகும். ஆனால் நாம் பாஜக அரசு பெரும் கம்பனிகளுக்கும் செல்வந்தர்களுக்கும் தொடர்ந்து வருமான வரிச்சலுகைகள் அளித்துவருவதை ஏற்கெனவே குறிப்பிட்டோம். இந்த ஆண்டும் செல்வந்தர்களிடம் இருந்தோ பெரும் கம்பனிகளிடம் இருந்தோ வளர்ச்சிக்கான வளங்களை திரட்டும் எந்த முயற்சியும் இல்லை. மாறாக வருமான வரி தொடர்பாக அறிவி க்கப்பட்டுள்ள சலுகைகளால் அரசுக்கு சுமார் 22 ஆயிரம் கோடி ரூபாய் வருமான வரி இழப்பு ஏற்படும் என்று பட்ஜெட் உரை கூறுகிறது என்பதை நாம் ஏற்கெனவே குறிப்பிட்டோம். ஜிஎஸ்டியின் கீழ் மத்திய பட்ஜெட் மூலமாக மறைமுக வரிகளை உயர்த்துவது சாத்தியமில்லை என்பதாலும் தேர்தல் நெருக்கத்தில் இருப்பதாலும் கொடுத்தல் வரிவிதிப்பு முயற்சிகள் இந்த இடைக்கால பட்ஜெட்டில் இல்லை. எனினும் பல மானியங்கள் வெட்டப்பட்டுள்ளன அல்லது தேவைக்கு மிகக்குறைவாகவே உயர்த்தப்பட்டுள்ளன. இது தவிர, வரி இழப்பாலும் தேர்தல் நோக்கில் முன்வைக்கப்பட்டுள்ள திட்டங்களாலும் அரசுக்கு ஏற்படும் வருமான இழப்பை எதிர்கொள்ள பாஜக அரசு தொடர்ந்து அரசு கடைப்பிடிக்கும் முக்கிய தந்திரம் பொதுத்துறை சொத்துக்களை விற்பதாகும். 2017-18 இல் பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகளை விற்று மத்திய அரசு ஒரு லட்சம் கோடி ரூபாய்க்கு மேல் பெற்றுள்ளது. இது பட்ஜெட்டில் சொல்லப்பட்டதைவிட 25000 கோடி ரூ கூடுதல் ஆகும். 2018-19 இல் இவ்வாறு பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகளை விற்பதன்மூலம் 80,000ரூ திரட்டப்பட்டுள்ளதாக பட்ஜெட் ஆவனங்கள் கூறுகின்றன. 2019-20 இல் ரூ 90,000 கோடி அளவிற்கு பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகள் விற்கப்படும் என்று பட்ஜெட் உரை கூறுகிறது. இது தாராளமய கொள்கைகளின் மிக மோசமான அம்சங்களில் ஒன்று. மக்கள் சொத்தை படிப்படியாக தனது நண்பர்களுக்கு தாரை வார்க்கும் ஏற்பாட்டை தான் மோடி அரசு அரங்கேற்றி வருகிறது. தற்சமயம் தனியார் நிறுவனங்கள் பொதுத்துறை பங்குகளை வாங்கும் நிலையில் இல்லை. எனவே மோடி அரசு பொதுத்துறை நிறுவனங்களான LIC, ONGC போன்ற நிறுவனங்களை

நிர்ப்பந்தப்படுத்தி அரசு விற்கும் பங்குகளை வாங்க வைக்கிறது. அரசின் தாராளமய கொள்கைகளால் இந்தப்பங்குகளின் மதிப்பு எதிர்காலத்தில் சரியும்பொழுது நட்டமடைவது இத்தகைய பொதுத்துறை நிறுவனங்களே. படிப்படியாக அவற்றையும் தனியாருக்கு தாரை வார்க்கும் பாதையில் தான் தாராளமய அரசுகள் பயணிக்கும். இதைத்தான் மோடி அரசு செய்துவருகிறது.

இப்படியெல்லாம் கணக்கு காட்டுவதில் பல ஜால வித்தைகள் செய்தாலும் அரசின் பிஸ்கல் பற்றாக்குறை இலக்கை மீறியுள்ளது. பிஸ்கல் பற்றாக்குறை என்பது அரசின் மொத்த செலவில் இருந்து கடன் அல்லாத வரவுகளை கழித்தால் கிடைக்கும் தொகை. இது நாட்டின் மொத்த உற்பத்தி மதிப்பில் 3% க்குக் குறைவாக இருக்கவேண்டும் நமது நாட்டில் ஒரு அபத்தமான சட்டம் உள்ளது. அந்த இலக்கை நோக்கி பயணிக்க மக்கள் நலன் சார்ந்த செலவுகளையும் மக்களுக்கான மானியங்களையும் அரசு தொடர்ந்து வெட்டி வருகிறது. கார்ப்பரேட்டுகள் மீதும் செல்வந்தர்களின் மீதும் உரிய வரிவிதித்து அதனை வசூல் செய்தாலே பற்றாக்குறை குறைந்துவிடும். ஆனால் அப்படி செய்தால் கார்ப்பரேட்டுகளும் முதலீட்டாளர்களும் ஊக்கம் இழந்து கடைகளை மூடிவிடுவார்கள் என்ற மிரட்டலின்கீழ் இன்று செல்வந்தர்கள் மென்மையாக அணுகப்படுகின்றனர், மறுபுறம் மக்கள் வாட்டப்படுகின்றனர். இதற்கு முற்றுப்புள்ளிவைக்க நாட்டிற்கு தேவை தலைவர்களை மாற்றுவது அல்ல. கொள்கைகளை மாற்றுவதாகும்.

### இறுதியாக

பட்ஜெட் புள்ளிவிவரங்களையும் அரசு தரும் விவரங்களையும் வைத்துதான் நாம் பலவிஷயங்களைப்பேச வேண்டியிருக்கிறது. ஆனால் இந்த புள்ளிவிவரங்களின் நமபகத்தன்மை தொடர்ந்து சரிந்து வருகிறது. இது பாஜக ஆட்சியின் “சிறப்பு சாதனை”. எடுத்துக்காட்டாக, 2016-17ஆம் ஆண்டுக்கான ஜிடிபி வளர்ச்சிவிகிதம் 7.1% என்று அரசு முன்பு கூறியது. இது அதன் முந்தைய ஆண்டின் வளர்ச்சி விகிதத்தில் இருந்து ஒரு சரிவைக் காட்டியது. நிபுணர்கள் அனைவருமே இந்த சரிவு மோடியின் நவம்பர் 2016 செல்லாக்காசு நடவடிக்கையால் தான் என்று ஒருமனதாக கூறினார். ஆனால் அரசு அதனை ஏற்க தயாராக இல்லை.

எனினும் அன்றைக்கு அதிகார பூர்வமாக வளர்ச்சிவிகிதம் 7.1% என்றே

பதிவாகியது. இப்பொழுது தேர்தல் நெருங்கும் வேலையில் செல்லாக்காசு நடவடிக்கையை நியாயப்படுத்தும் கதையாடலின் பகுதியாக 2016-17ஆம் ஆண்டுக்கான ஜிடிபி வளர்ச்சிவிகிதம் 8.2% என்று அறிவிக்கப்பட்டுள்ளது! வேலையின்மை தொடர்பான அறிக்கையை வெளியிட மறுத்ததும் இதனால் தான். பல சட்டபூர்வமான அமைப்புகளை நாசப்படுத்திவரும் மோடி அரசின் அந்நடவடிக்கைகளின் வரிசையில் புள்ளியியல் நிறுவனமும் சிக்கியுள்ளது. பட்ஜெட் பற்றிப்பேசும் பொழுது இவற்றை எல்லாமும் நாம் மனதில் கொள்ள வேண்டும்.

வரும் வாரங்களில், நாட்களில் பட்ஜெட் பற்றிய அரசின் பிரச்சாரமும் கதையாடலும் மேலும் மேலும் பொய்களின் தொகுப்பாக உலாவரும். இதனை உண்மைகளின் அடிப்படையிலான நமது பிரச்சாரத்தால் நாம் முறியடிக்க வேண்டும். இது நம்முன் உள்ள முக்கிய அரசியல் கடமையாகும்.

## 6. மார்க்சை பயில்வது என்பது என்ன?

*ஜி ஜின்பிங்*

*தமிழில்: முனைவர் சந்திரகுரு*

*(மார்க்ஸ் பிறந்த நாள் இருநூற்றாண்டு விழாவை ஒட்டி மக்கள் சீனத்தின் குடியரசுத்தலைவர் ஜி ஜின்பிங் ஆற்றிய உரையின் பகுதிகள்)*

*உயர்ந்த இலட்சியங்களைப் பேணுவதாகவும், மனிதகுலத்தின் விடுதலைக்கான போராட்டத்திற்கு அர்ப்பணிக்கப்பட்டதுமாக அமைந்தது மார்க்சினுடைய வாழ்க்கை. "தொழிலைத் தேர்ந்தெடுப்பது குறித்து இளைஞர் ஒருவரின் சிந்தனைகள்" என்ற தலைப்பில் உயர்நிலைப் பள்ளி இறுதித் தேர்விற்கான கட்டுரை ஒன்றை 1835ஆம் ஆண்டில் 17 வயதான மார்க்ஸ் எழுதியிருந்தார். அதில் "நாம் அனைவரும் மனிதகுலத்திற்குத் தேவையான அனைத்தையும் செய்கின்ற வகையில் பொருத்தமான வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்துக் கொள்வோம் என்றால், எந்தவொரு சுமையும் நம்மைப் பணியவைக்க முடியாது.*

*ஏனெனில் அவையனைத்தும் அனைவருக்கும் நன்மையளிக்கின்ற வகையில் நாம் செய்கின்ற தியாகங்களாக இருக்கின்றன. எனவே நமக்கு கிடைக்கின்ற அந்த மகிழ்ச்சியானது மிகக் குறுகிய, வரையறைக்குட்பட்ட, சுயநலம் சார்ந்த மகிழ்ச்சியாக இல்லாமல், கோடிக்கணக்கானவர்களுக்குச் சொந்தமானதாக இருக்கும். நமது செயல்கள் எந்தவித ஆரவாரமுமின்றி அமைதியானவையாக, ஆனாலும் நிரந்தரமாக நீடித்திருப்பவையாக, நமது சாம்பல் மீது மேன்மக்கள் கண்ணீரைச் சிந்துகின்ற வகையில் இருக்கும்" என்று குறிப்பிட்டிருந்தார். அவரின் கரடுமுரடான வாழ்க்கைப் பயணத்தில், வறுமையையும், நோய்களையும் மார்க்ஸ் எதிர்கொள்ள வேண்டியிருந்தது. ஆயினும், அவர் இறுதிவரை உறுதியாகப் போராடி, தான் கொண்டிருந்த லட்சியங்களில் இருந்து சிறிதும் விலகாமல், மனிதகுலத்தின் விடுதலைக்கான உயர்ந்த லட்சியத்திற்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட, பெருமை மிகுந்த வாழ்வை வாழ்ந்து காட்டினார்.*

*மகத்தான தத்துவம் உதயம்:*

*மார்க்சுடைய பெயரால் அழைக்கப்படும் தத்துவமான மார்க்சியம், அவர் நமக்கு விட்டுச் சென்ற மிக மதிப்பு வாய்ந்த, செல்வாக்குமிக்க மரபியமாகும். சூரியனைப் போல் தகதகக்கும் இக்கோட்பாடு மனித சமூகத்திற்கு அதன் வரலாற்றின் போக்கை எடுத்துக் காட்டி, அதன் விடுதலைக்கான பாதையை மினுமினுக்கச் செய்கிறது.*

*விமர்சனம் என்ற ஆயுதத்தை, எவ்விதத்திலும், ஆயுதத்தைக் கொண்ட விமர்சனத்தினால் மாற்றீடு செய்ய முடியாது. பௌதீக சக்தியை எதிர்கொண்டு வீழ்த்துவது பௌதீக சக்தியால்தான் சாத்தியம்; ஆனால், ஒரு தத்துவக் கருத்தும் கூட வெகுமக்களை இறுகப் பற்றியவுடன் பொருளாயத வலிமையாக மாறிவிடும்.'' என்று ஒருமுறை மார்க்ஸ் குறிப்பிட்ட கருத்து பிரபலமானது. தத்துவம், அரசியல், பொருளாதாரம், விஞ்ஞான சோசலிசம் என்று தலையாய மூன்று பகுதிகளை மார்க்சியம் கொண்டுள்ளது. அவற்றைத் தனித்தனியே பார்த்தால், ஜெர்மானிய தத்துவம், பிரிட்டிஷ் அரசியல் பொருளாதாரம், பிரெஞ்சு கற்பனாவாத சோசலிசம் ஆகியவற்றிலிருந்து அவை தோன்றியுள்ளன.*

*இருந்த போதிலும் மார்க்சியத்திற்குள் இவற்றை இறுதியாக மாற்றியமைத்ததற்கான அடிப்படைக் காரணங்களாக மார்க்ஸ் கொண்டிருந்த ஆழமான அவதானிப்புகள், அவர் வாழ்ந்த காலத்திலும், மனித சமுதாயத்தின் வளர்ச்சிக்கான வடிவம் குறித்த அவரது ஆழ்ந்த அறிவிலும் வேர்கொண்டிருந்தன. ''உலகத்தையே மாற்றும் வகையில் கண்டறியப்பட்ட கருத்துக்களையோ, உருவாக்கப்பட்ட கொள்கைகளையோ அடிப்படையாகக் கொண்டடு அமைதவை அல்ல கம்யூனிஸ்டுகள் மேற்கொள்ளும் கோட்பாட்டு முடிவுகள். பொதுவான வார்த்தைகளில் சொன்னால், அவை நம் கண்களுக்கு முன் நடந்துகொண்டிருக்கும் வரலாற்று இயக்கத்திலிருந்து, வர்க்கப் போராட்டத்திலிருந்து எழுகின்ற வர்க்க உறவு நிலைமைகளில் இருந்தே அந்த முடிவுகளை வந்தடைகிறார்கள்.*

*மனித குல வரலாற்றின் நெடிய போக்கை கணக்கில் கொண்டால் மட்டுமே, நம்மால் வரலாற்று இயக்கப் போக்குகளின் சாரத்தையும், சமகால வளர்ச்சிகளின் திசைப்போக்குகளையும் குறித்த பார்வையை வந்தடைய முடியும். மார்க்சின் அறிவியல்பூர்வமான ஆய்வுகள் பற்றிக் கூறும் போது, ''மனித சமுதாயம் உருவாக்கிய எதனையும் மறுதலிக்காமல், அவையனைத்தையும் நன்கு ஆய்ந்தறிந்து அவர்*

விமர்சனப்பூர்வமாக மாற்றியமைத்தார். அவற்றை மறுபரிசீலனை செய்தார், விமர்சனத்திற்கு உள்ளாக்கினார், மனித சிந்தனையை உருவாக்கிய தொழிலாளி வர்க்க இயக்கத்தின் மீது அதனை உறுதி செய்தார்., முதலாளித்துவ வரையறைகளால் சூழப்பட்ட அல்லது முதலாளித்துவ முடிவுகளால் பிணைக்கப்பட்டுள்ள மக்களால் வந்தடைய முடியாத தீர்மானங்களை அவர் வரையறுத்தார்'' என்று குறிப்பிடுகிறார் லெனின். மார்க்சின் சிந்தனைகள் உருவான காலத்திலிருந்தே, கால நிலைமைகளை மாற்றியமைக்கவும் தொடங்கின; அவரின் கருத்துக்களும், கோட்பாடுகளும்

*அறிவியல் ரீதியிலான தத்துவம்:*

மார்க்சியம் என்பது ஒரு அறிவியல் கோட்பாடாக இருக்கின்றது. அது மனித சமுதாயத்தின் வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட கட்டமைப்பை வெளிப்படுத்துவதாக இருக்கிறது. தன்னுடைய விஞ்ஞான சோஷலிசம் குறித்த கருத்துக்களை மார்க்ஸ் உருவாக்கிய காலத்திற்கு வெகு முன்பிருந்தே இருந்து வந்த கற்பனாவாத சோசலிஸ்டுகள் சமுதாயத்தைப் பீடித்திருக்கும் துன்பங்களைக் கண்டு துயரம் அடைபவர்களாக, மிகச்சிறந்த சமுதாயம் குறித்த நல்ல பல கருத்துக்களைக் கொண்டவர்களாக இருந்தாலும், சமுதாயத்தின் முன்னேற்றத்தை அடிப்படையாகக் கொண்ட கட்டமைப்புகளை புரிந்து கொண்டவர்களாக அவர்கள் இல்லாததால், தங்களுடைய கொள்கைகளை அடைவதற்கான சிறந்த வழி எதுவும் அவர்களுக்கு கிட்டவில்லை.

இதன் விளைவாக, சமுதாய வளர்ச்சியின் மீது உண்மையான தாக்கத்தை அவர்கள் கொண்டிருந்த கருத்துக்களால் ஏற்படுத்த இயலவில்லை. வரலாற்றுச் சிறப்புமிக்க பொருள்முதல்வாதம், உபரி மதிப்பு குறித்த கோட்பாடு போன்ற மார்க்சிடமிருந்து உருவான கருத்துக்கள் மனித சமுதாயத்தின் வளர்ச்சியை அடிப்படையாகக் கொண்ட பொதுவான கட்டமைப்புகளை வெளிச்சத்துக்கு கொண்டு வந்தன. முதலாளித்துவ நடவடிக்கைகளை கட்டுப்படுத்துகின்ற குறிப்பிட்ட விதிகளை அவை வெளிப்படுத்தின. தேவை என்ற உலகில் இருந்து சுதந்திரம் என்ற உலகை நோக்கி மனிதகுலம் நகர்வதற்கு இத்தகைய கண்டுபிடிப்புகள் வழிவகுத்தன. மேலும் மனிதகுலம் தனக்கான சுதந்திரம் மற்றும் விடுதலையை உணர்ந்து கொள்வதற்கான பாதையில் ஒளிபாய்ச்சுபவையாகயும்

அவை இருந்தன. .

மார்க்சியம் என்பது மக்கள் சார்ந்த கோட்பாடாக இருக்கிறது. தங்களுடைய சுயமரியாதையை மக்கள் அடையும் வகையில் முதன்முறையாக உருவாக்கப்பட்ட சிந்தனையாக அது இருந்தது. மிகப் பரந்ததாக, ஆழ்ந்ததாக மார்க்சியம் இருந்த போதிலும், மனிதகுல விடுதலைக்கான குறிக்கோள் என்று அதனை ஒரே வாக்கியத்தில் மிகச் சுருக்கமாக நம்மால் கூற முடியும். சமுதாயத்தில் மேலாதிக்கம் கொண்ட கோட்பாடுகளாக, மார்க்சின் காலத்திற்கு முன்னால் இருந்த கோட்பாடுகள் அனைத்தும் ஆளும் வர்க்கத்திற்கு சேவை செய்கின்ற வகையிலேயே இருந்தன.

ஆனால் மார்க்சியம்தான் மக்களுடைய பார்வையில் மனிதகுலத்திற்கான சுதந்திரம் மற்றும் விடுதலைக்கான வழியைத் தேடுகின்ற முதல் கோட்பாடாக இருந்தது. எந்த அடக்குமுறையோ அல்லது சுரண்டலோ இல்லாத, மக்கள் அனைவரும் சமமாகவும் சுதந்திரமாகவும் வாழ்கின்ற சிறந்த சமுதாயத்தை இறுதியில் உருவாக்குவதற்கான வழியைத் தெளிவுபடுத்திக் காட்டுவதற்கான அறிவியல் கோட்பாடுகளை மார்க்சியம் பயன்படுத்துகிறது, மக்கள் மத்தியில் நன்கு வேரூன்றியுள்ளதால், மார்க்சியத்தின் செல்வாக்கானது காலம் மற்றும் எல்லைகளைத் தாண்டியதாக இருக்கிறது. வரலாற்றை முன்னெடுத்துச் செல்லுகின்ற பாதையே மனிதகுலத்திற்கான சரியான பாதை என்பதை மார்க்சியம் தெளிவுபடுத்துகிறது.

### நடைமுறைக்கு வழிகாட்டி:

மார்க்சியம் என்பது ஒரு நடைமுறைக் கோட்பாடாக இருக்கிறது. தங்கள் செயல்களின் வழியாக உலகை மாற்றுவதை நோக்கி மக்களை அது வழிநடத்துகிறது. "சமூக வாழ்க்கை அனைத்தும் அவசியமான வகையில் நடைமுறைக்கானதாக உள்ளது", மேலும் "தத்துவஞானிகள் இந்த உலகை பல்வேறு வழிகளில் விளக்கியுள்ளனர்; ஆனால் அதனை மாற்ற வேண்டியதுதான் முக்கியம்" என்கிறார்.

இருத்தலையும், நடைமுறையையும் உள்ளடக்கியிருப்பதே மார்க்சியத்தின் பண்பாகும், அதன் நடைமுறைத்தன்மையே மார்க்சிய கோட்பாட்டை மற்ற கோட்பாடுகளிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது. படிப்போடு தன்னை ஒடுக்கிக் கொள்ளும் புலமை என்றில்லாமல், மார்க்சியமானது வரலாற்றில் மக்களுடைய

*பங்கில் மாற்றங்களைக் கொண்டு வருவதற்காக உருவாக்கப்பட்டதாக இருக்கிறது. மனிதகுலத்தின் விடுதலையை முன்னெடுப்பதற்கான நடைமுறையில்தான் மார்க்சியம் உருவானது, தெளிவானது, மேம்பாடடைந்தது. அது இந்த உலகத்தைப் புரிந்து கொள்ளவும், மாற்றியமைக்கவும் மக்களுக்கு உள்ளூக்கம் தருகின்ற ஆற்றல் மிகுந்ததாக இருக்கிறது.*

*மார்க்சியம் எல்லையற்று, தொடர்ந்து வளர்கின்ற தத்துவமாக இருக்கின்றது. எப்போதும் காலத்தை முந்தி நிற்கிறது. மார்க்சியம் என்பது வறட்டுச் சூத்திரமல்ல என்றும், அது நடைமுறை மாற்றங்களின் ஊடாக வளர்க்கப்படுகிற, செயல்முறைகளுக்கு வழிகாட்டியாக இருக்கிறது என்றும் திரும்பத் திரும்ப மக்களிடம் மார்க்ஸ் அறிவுறுத்தி வந்தார். மார்க்சிய தத்துவ வளர்ச்சியின் வரலாறானது காலம், நடைமுறை மற்றும் அறிதல் ஆகியவற்றின் மாற்றங்களுக்கிணங்க, மார்க்ஸ், ஏங்கெல்ஸ் மற்றும் அவர்களைப் பின்தொடர்ந்து வந்தவர்களால் தொடர்ந்து முன்னேற்றப்பட்ட ஒன்றேயாகும். இந்த வரலாறு, மனிதகுலத்தின் கலாச்சார மற்றும் அறிவுசார் சாதனைகள் அனைத்தையும் தன்னகத்தே எடுத்துக் கொண்டு தொடர்ந்து தன்னைத் தெளிவுபடுத்திக் கொள்கிற வரலாறாகும். எனவேதான், மார்க்சியம் தன்னுடைய கவர்ச்சிகரமான இளமைத்தன்மையை தக்கவைத்துக் கொண்டு சமகால வளர்ச்சிப் போக்குகளில் புதிய பிரச்சனைகளை ஆராய்வதுடன், மனிதகுலத்தை எதிர்கொள்கின்ற புதிய சவால்களுக்கு பதிலளிப்பதாகவும் இருக்கிறது.*

### *தத்துவார்த்தக்கருவி:*

*"அறிவியலின் உச்சாணிக் கொம்பில் ஏற விரும்புகின்ற ஒரு நாடு, தத்துவார்த்த சிந்தனைகள் எதுவுமின்றி அதனை அடைய முடியாது" என்று ஏங்கெல்ஸ் ஒரு முறை கூறினார். சீனர்களாகிய நாம் தேச மறுசீரமைப்பை அடைய வேண்டுமென்றால், அதேபோன்று தத்துவார்த்த சிந்தனைகள் எதுவுமின்றி அடைய முடியாது. மார்க்சியம் என்பது நமது கட்சிக்கும், தேசத்துக்கும் வழிகாட்டுகின்ற கோட்பாடாக இருக்கிறது. இந்த உலகைப் பற்றிப் புரிந்து கொள்வதற்கும், அதன் அடிப்படை வடிவங்களைப் புரிந்து கொள்வதற்கும், அதன் உண்மையை அறிந்து கொள்வதற்கும், மாற்றங்களைக் கொண்டு வருவதற்கும் நாம் பயன்படுத்துகின்ற வெல்ல முடியாத, மிகச் சிறந்த*

கோட்பாட்டுக் கருவியாக மார்க்சியம் இருக்கிறது.

மார்க்சியக் கருத்துக்களும், கோட்பாடுகளும் மிகப் பரந்து, ஆழமானவையாக இருக்கின்றன, திரும்பத் திரும்ப படித்தாலும் கூட அவை எக்காலத்திற்கும் பொருந்தும் வகையிலேயே இருக்கின்றன. இந்தப் புதிய யுகத்தில், மார்க்சைப் படிக்க வேண்டிய தேவை சீனக் கம்யூனிஸ்டுகளுக்கு இன்னும் இருக்கிறது. மார்க்சியத்தைப் பயில்வதோடு, அதை நடைமுறையிலும் நாம் கடைப்பிடிக்க வேண்டியிருக்கிறது. அதன் மூலம், இந்தப் புதிய யுகத்தில் இன்னும் உறுதியான நம்பிக்கையுடனும், ஞானத்துடனும் சீன சோசலிசத்தை நாம் நிலைநிறுத்தி மேம்படுத்த முடியும்.

### மனித சமூக மேம்பாடு:

மார்க்சைப் பயில்வதற்கு, மனித சமுதாயத்தின் வளர்ச்சிக் கட்டங்கள் குறித்த மார்க்சின் சிந்தனையை கற்று, கடைப்பிடிப்பது அவசியம். மனித சமுதாயம் இறுதியில் கம்யூனிசத்தை நோக்கியே நகரும் என்பதை தன்னுடைய ஆய்வுகளின் மூலம் மார்க்ஸ் வெளிப்படுத்தினார். எதிர்காலச் சமுதாயத்தில் "ஒவ்வொருத்தருக்குமான முன்னேற்றமே அனைவருக்குமான முன்னேற்றத்திற்கு வழிவகுக்கும் என்கிற வகையில் நாம் இணைந்திருக்க வேண்டும்" என்பதை உறுதியாக நம்பிய மார்க்ஸ், ஏங்கெல்ஸ் ஆகியோர், "பாட்டாளி வர்க்கத்திற்கு இழப்பதற்கு அடிமைச் சங்கிலிகளைத் தவிர வேறெதுவும் இல்லை.

அவர்கள் வெற்றி காண வேண்டிய உலகம் இருக்கிறது." என்று கூறினர். தங்கள் மீதும், சமுதாயத்தின் மீதும், மனித வளர்ச்சியின் மீதும் ஆளுமை கொண்டவர்களாக மக்கள் மாறிய பிறகு வரலாற்றின் அலை முன்னோக்கி மட்டுமே நகரும் என்றும், நடப்பில் உள்ள நிலைமைகளின் தொடர்ச்சியான மாற்றங்களின் மூலம் உணரக்கூடியதாக கம்யூனிச லட்சியம் இருக்கும் என்றும் மார்க்ஸ் உறுதியுடன் நம்பினார். கம்யூனிஸ்டுகளின் தடுமாற்றமில்லாத லட்சியங்கள் மற்றும் நம்பிக்கைகளுக்கான தத்துவார்த்த அடித்தளத்தை மார்க்சியம் நிலைநிறுத்துகிறது. உலகளாவிய கண்ணோட்டங்கள், இயக்கவியல் மற்றும் வரலாற்றுப் பொருள்முதல்வாதம் ஆகியவற்றின் ஆய்வு நெறிமுறைகள் குறித்த திறம் நம்மிடம் அவசியம் இருக்க வேண்டும். கம்யூனிசத்தை உணர்ந்து கொள்வது என்பது ஒவ்வொரு அடியாக இலக்கை நோக்கி நாம் எடுத்து வைக்கின்ற வரலாற்றுச்

செயல்முறை என்பதை நாம் முழுமையாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

நாம் இணைந்து முன்னெடுக்கும் லட்சியமான சீன சோஷலிசம் மற்றும் தற்போது நாம் ஈடுபட்டிருக்கும் முயற்சிகள் ஆகியவற்றை கம்யூனிசத்தின் உன்னத லட்சியத்துடன் ஒருங்கிணைக்க வேண்டிய தேவை நமக்கு இருக்கிறது. சீன சோசலிசத்தின் பாதை, கோட்பாடு, அமைப்பு, கலாச்சாரம் ஆகியவற்றின் மீது முழு நம்பிக்கையுடன் நாம் இருக்க வேண்டும். சீனக் கம்யூனிஸ்டுகளின் கருத்தியல்கள், நம்பிக்கைகளுடன் நம்மைப் பிணைத்துக் கொள்ள வேண்டும். மார்க்சைப் போல நாம் இருக்க வேண்டும். நமது வாழ்நாள் முழுவதும் கம்யூனிசத்திற்காகப் போராட வேண்டும்.

மக்களுடைய நிலைப்பாட்டை உயர்த்திப்பிடிக்கும் வகையில் மார்க்சின் சிந்தனையை கற்று, கடைப்பிடிப்பது, மார்க்சைப் பயில அவசியமாகும். மக்களுடன் நெருக்கமான உறவைப் பேணுவது மார்க்சியத்தின் தனித்துவமான தன்மையாக இருக்கிறது. மார்க்சின் கூற்றுப்படி, வெகுமக்களின் செயல்பாடுகளே வரலாற்றுச் செயல்பாடுகளாகும். தங்கள் வாழ்க்கை மேம்பாட்டுக்கு மக்களைத் தயார்ப்படுத்துவதையே, மார்க்சின் வாழ்க்கையைப் பின்தொடர்கிற ஒருவர் அறிகிறார். நமது அடிப்படையான நிலைப்பாடு என்பது மக்களுக்கானது என்பதையும், மக்களுடைய நல்வாழ்வுக்காகப் போராடுவதே நமது அடிப்படையான பணி என்பதையும் நாம் எப்போதும் உறுதிசெய்துகொண்டே இருக்க வேண்டும்.

மக்கள் அனைவருக்காகவும் முழுமனதுடன் பணி புரிவது என்ற நமது அடிப்படைக் கொள்கைக்கு உறுதுணையாக இருந்து வெகுஜன வழியை நாம் முன்னெடுக்க வேண்டும். மக்களுடைய பிரதான நிலைப்பாடுகளையும், அவர்களின் படைப்பாற்றலையும் நாம் மதிக்க வேண்டும். அவர்களோடு எப்போதும் நெருக்கமான உறவை நாம் வைத்திருக்க வேண்டும். துளைக்க இயலாத பெருஞ்சுவருக்குள் நமது பலத்தை வழிநடத்த வேண்டும். வரலாற்றை முன்னகர்த்தும் வகையில் மக்களை ஒன்றிணைத்து, அவர்களுக்குத் தலைமையேற்று வழிநடத்த வேண்டும். இது வரலாற்றின் வளர்ச்சிக் கட்டங்களுக்கு இசைவான தேர்வாக அவசியம் இருக்கவேண்டும் என்பதுடன், நமது சொந்த முயற்சியில், நம்முடைய நோக்கங்களுக்கு உண்மையாக இருக்கின்ற வகையில், கம்யூனிஸ்டுகள்

மேற்கொள்ள வேண்டிய பொறுப்பாகவும் இருக்கிறது.

*உற்பத்தி சக்திகளின் வளர்ச்சி:*

*மார்க்சைப் பயில்வதற்கு, உற்பத்தி சக்திகள் மற்றும் உறவுகள் குறித்த மார்க்சின் சிந்தனையை கற்று, கடைப்பிடிப்பது அவசியமாகின்றன. உற்பத்தியின் பொருளுயாத சக்திகளே எல்லா சமூக நிலைமைகளுக்குமான பொருளியல் முன்நிபந்தனைகளை உருவாக்குகின்றது, மேலும் குறிப்பிட்ட கட்டத்தில் அடைந்துள்ள உற்பத்தி சக்திகளின் வளர்ச்சிக்கு ஏற்ப நிலவும் உற்பத்தி உறவுகளின் ஒட்டுமொத்தமே ஒரு சமூகத்தின் பொருளாதார அடித்தளமாக பார்க்கப்படுகிறது. உற்பத்தி சக்திகளே ஒரு சமுதாயத்தை முன்னேற்றும் ஆற்றல் வாய்ந்த, புரட்சிகரமான காரணிகளாக இருக்கின்றன. "மனிதர்களுக்கு பெருமளவில் கிடைக்கும் இந்த உற்பத்தி சக்திகள் சமுதாயத்தின் இயல்பை நிர்ணயிக்கின்ற ஆற்றலைக் கொண்டுள்ளன". உற்பத்தி சக்திகளுக்கும், அவற்றின் உறவுகளுக்கும் இடையிலான மற்றும் பொருளாதார அடித்தளத்திற்கும், பெரிய கட்டுமானங்களுக்கும் இடையிலான பரஸ்பரத் தொடர்புகளும், கட்டுப்பாடுகளுமே சமுதாய வளர்ச்சியை முழுமையாக நிர்வகிக்கின்றன.*

*தேசிய உற்பத்தி சக்திகளைக் கட்டவிழ்த்து விடுவதும் வளர்த்தெடுப்பதும் சோசலிசத்தின் அடிப்படைக் கடமைகளாகும். இதுகுறித்து தொடர்ந்து ஆராய்வதும், கடினமாக உழைப்பதும் சீனக் கம்யூனிஸ்டுகள் முக்கியமாக கவனத்தில் கொள்ள வேண்டியதாக இருக்கின்றது. சீன மக்கள் குடியரசு நிறுவப்பட்டதில் இருந்து, குறிப்பாக சீர்திருத்தங்கள் மற்றும் சந்தையைத் திறந்து வைத்ததில் இருந்து, தேசிய உற்பத்தி சக்திகளை கட்டவிழ்த்து, வளர்ச்சி காண்பதில் உறுதியான வழிகளில் மக்களை வழிநடத்தியதன் மூலம், மேற்குலக நாடுகள் பல நூற்றாண்டுகள் எடுத்துக் கொண்டதற்கு மாறாக 70 ஆண்டுகளுக்குள்ளாகவே நமது கட்சி சாதித்திருக்கிறது. இதன் மூலம் ஏற்பட்ட நமது நாட்டின் அதிவேக உயர்வு நம்மை உலகின் இரண்டாவது மிகப்பெரிய பொருளாதாரமாக மாற்றியிருக்கிறது.*

*மக்கள் ஜனநாயகம்:*

*மார்க்சைப் பயில்வதற்கு, மக்கள் ஜனநாயகம் குறித்த மார்க்சின் சிந்தனையை*

கற்பதும், கடைப்பிடிப்பதும் அவசியம். "பாட்டாளி வர்க்க இயக்கம் என்பது தன்னறிவு கொண்ட, மிகப்பெரும்பான்மையினரின் நலனைப் பாதுகாக்கும், மிகப்பெரும்பான்மையினரின் விடுதலைக்கான இயக்கமாகும்", "பாட்டாளி வர்க்கம் ஆட்சிக்கு வரும் போது, பழைய அரசு இயந்திரத்தைக் கொண்டே நிர்வகிக்க முடியாது" என்றும், "முந்தைய அரச அதிகாரம் தகர்க்கப்பட வேண்டும்... அதற்குப் பதிலாக புதிய, உண்மையான ஜனநாயக ஆட்சி ஏற்படுத்தப்பட வேண்டும்" என்றும் மார்க்சும், எங்கல்சும் குறிப்பிட்டுள்ளனர்.

அரச அமைப்புகள் பொதுமக்களைக் கட்டுப்படுத்துவதிலிருந்து மாறி அவர்களுக்கு சேவை செய்பவையாக, மக்களின் மேலாண்மையை ஏற்றுக் கொள்பவையாக இருக்க வேண்டும். அரசியல் வளர்ச்சியில் சோசலிசப்பாதையை சீன குணாதிசயங்களுடன் நாம் தொடர்ந்து தக்க வைத்திருக்க வேண்டும். கட்சித் தலைமையோடு சுமூகமாக ஒருங்கிணைந்திருப்பதை உறுதி செய்து, மக்களைக் கொண்டு நாட்டை வழிநடத்துவது மற்றும் சட்டத்தின் ஆட்சி ஆகியவற்றிற்கு உறுதியளித்து சீனாவின் சோசலிச ஜனநாயக முன்னேற்றத்திற்கான வழியினை வகுக்க வேண்டும். மக்களைக் கொண்டு நாட்டை வழிநடத்துவதற்கான நிறுவன அமைப்புகளை வலுப்படுத்த வேண்டும். சீனாவின் ஆட்சி முறை, திறன் ஆகியவற்றை மேம்படுத்துவதை விரைவுபடுத்த வேண்டும். மக்களின் உற்சாகம், முன்முயற்சி, படைப்பாற்றல் ஆகியவற்றிற்கான முழு சுதந்திரத்தை வழங்கி மக்கள் ஜனநாயகத்தை முழுமையாக உறுதியாகத் திறம்படச் செயல்படுத்த வேண்டும்.

### கலாச்சார மேம்பாடு:

மார்க்சைப் பயில்வதற்கு, கலாச்சார மேம்பாடு குறித்த மார்க்சிய சிந்தனைகளைக் கற்றலும், பின்பற்றுதலும் அவசியமாகும். வேறுபட்ட பொருளாதார சூழல் மற்றும் சமுதாய நிலைமைகளின் காரணமாக மக்களிடயே வேறுபட்ட கருத்துக்களும், கலாச்சாரங்களும் உருவாகும் என மார்க்ஸ் நம்பினார். இவ்வாறு கருத்துக்களையும், கலாச்சாரங்களையும் பொருளாதார அடித்தளமே தீர்மானிக்கிறதென்றாலும் அவையும் எதிர்வினை செய்கின்றன. வளர்ச்சியடைந்த கருத்துகளும், கலாச்சாரமும் வெகுமக்களால் ஏற்கப்பட்டவுடன், தவிர்க்க முடியாத பௌதீக சக்தியாக மாற்றம் பெறுகின்றன.

நேர்மாறான விதத்தில், காலம் கடந்த அல்லது தவறான கருத்துக்களை கைவிடாமல் தொடர்ந்தால் அவை சமூக முன்னேற்றத்திற்குத் தடைக்கல்லாகின்றன. தத்துவ விழிப்புணர்வும், பண்பாட்டு உறுதியும் தேச முன்னேற்றத்திற்கான சக்திகளாகும்; மேம்பட்ட மதிப்பீடுகளும், சிந்தனைச் சுதந்திரமும் ஒரு சமூகத்தின் மூலாதாரங்களாகும். ஒரு தேசத்தின் மையச் சிந்தனையை வடிவமைப்பதாகவும், மாற்றியமைப்பதாகவும் இருக்கிறது. சீன நிலைமைகளோடு ஒன்றிச் செயல்படும் அதே சமயம் நாம் நவீனமயம், உலக நிலைமைகள் மற்றும் எதிர்காலத்தையும் தழுவுகிற தேவை நம் தேசத்தின் முன் உள்ளது. மார்க்சியமே நம்மை வழிநடத்துகின்ற சிந்தனை என்ற நிலைப்பாட்டை நாம் உறுதிப்படுத்த வேண்டும். மேம்பட்ட சோசலிசக் கலாச்சாரத்தை வளர்த்து, சோசலிசக் கலாச்சார, ஒழுக்க நெறிகளை கடைப்பிடிப்பதை வலுப்படுத்த வேண்டும்.

சமுதாய வளர்ச்சியின் அனைத்துப் பகுதிகளும் முக்கியமான சோசலிச விழுமியங்களால் ஊக்குவிக்கப்பட்டுள்ளனவா என்பதையும், நம்முடைய சிறந்த பாரம்பரியக் கலாச்சாரத்தின் ஆக்கப்பூர்வமான மாற்றங்கள் மற்றும் புதுமையான வளர்ச்சிக்கு அவை ஊக்கமளிக்கின்றனவா என்பதையும் நாம் கண்டறிந்து கொள்ள வேண்டும். தங்களுடைய அரசியல் விழிப்புணர்வு மற்றும் தார்மீக மதிப்பீடுகளை நமது மக்கள் உயர்த்திக் கொள்ள உதவுவதோடு, நேர்த்தியான கலாச்சாரத்தை அவர்கள் பாராட்டுவதற்கும் நாம் உதவ வேண்டும். அவ்வாறு செய்வதன் மூலம், நம்மால் சீனக் கலாச்சாரத்திற்கு புத்துணர்வை அளிக்க முடியும்.

### சமூக வளர்ச்சிக்கு மார்க்சியம்:

மார்க்சைப் பயில்வதற்கு, சமூக வளர்ச்சி குறித்த மார்க்சிய சிந்தனைகளைக் கற்றலும், நடைமுறைப்படுத்தலும் அவசியம். எதிர்காலச் சமூகத்தில் "உற்பத்தி என்பது, அனைவருக்கும் செல்வத்தை வழங்கிடும் நோக்கில் கணக்கிடப்பட்ட ஒன்றாக இருக்கும்" என்றும் "அனைவருக்குமானவற்றை அனுபவித்திட அனைவரும் பங்கேற்பது" அதன் வெளிப்பாடாக இருக்கும் என்றும் மார்க்சும் ஏங்கல்ஸும் கூறினர். கம்யூனிஸ்ட் கட்சி அறிக்கை, கோதா வேலைத் திட்டம் குறித்த திறனாய்வு, மூலதனம் மற்றும் பிற மார்க்சின் படைப்புகளின் மீது ஏங்கெல்ஸ் தொடர்ந்து தனது கருத்துக்களை வெளியிட்டார்.

“ஆரோக்கியமான, பயனுள்ள வேலை, போதுமான செல்வம், ஓய்வு, உண்மையான, முழுமையான சுதந்திரம் ஆகியவற்றை அனைவருக்கும் தருவதாக சோசலிசத்தின் கீழ் உள்ள சமூகம் இருக்க வேண்டும்”. நல்ல வாழ்க்கை வாழ்வதற்கு மக்கள் விரும்புகிறார்கள், அவர்கள் அதனை அடைவதற்கு உதவுவதை நம் இலக்காகக் கொள்ள வேண்டும். மக்களை மையமாகக் கொண்ட வளர்ச்சிக்கான தத்துவத்தை நாம் கடைப்பிடிக்க வேண்டும், மக்கள் முன் இருக்கின்ற மிக முக்கியமான உடனடிப் பிரச்சனைகள் மீது கவனம் செலுத்த வேண்டும். மக்களுக்கான பாதுகாப்பான வாழ்க்கைத் தரத்தை உறுதிப்படுத்தி தொடர்ந்து மேம்படுத்த வேண்டும்.

அனைவருக்குமான சமூகம், சமூக நீதியுடைய சமூகம் என்பனவற்றை முன்நிறுத்தி, உயர்தரத்திலான குழந்தைப் பராமரிப்பு, கல்வி, வேலைவாய்ப்பு, மருத்துவ சேவைகள், முதியோர் பராமரிப்பு, வீட்டு வசதி, சமூக உதவி ஆகியவற்றைப் பெறுவதற்கான உத்தரவாதத்தை ஏற்படுத்த வேண்டும். சீர்திருத்தங்களாலும், சமூக மேம்பாட்டினாலும் கிடைக்கும் பலன்கள் அனைத்து மக்களையும் நியாயமான வழியில் சென்றடைவதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். அவ்வாறு செய்வதன் மூலம், முழுமையான மனித வளர்ச்சியை ஊக்குவித்து, அனைவராலும் வளமையைப் பகிர்ந்து கொள்ள முடியும்.

### மனிதர்களும் இயற்கையும்:

மார்க்சைப் பயில்வதற்கு, இயற்கைக்கும் மக்களுக்கும் இடையிலான உறவைப் பற்றிய மார்க்சிய சிந்தனைகளை கற்பதும், பின்பற்றுதலும் தேவைப்படுகின்றன. “இயற்கையின் மூலமே மனிதன் உயிர் வாழ்கிறான்” என்பதை மார்க்ஸ் உணர்ந்திருந்தார். மனிதன் உயிர் வாழ்வதற்குத் தேவையான வளமான மண், ஆறுகள், ஏரிகள், மீன் வளம் மிகுந்த கடல்கள் என்று அனைத்தையும் கொண்டிருக்கும் இயற்கை, உற்பத்திக்குத் தேவையான ஆதாரங்களையும் மனிதனுக்கு வழங்குகிறது. மனிதர்கள் உயிர் வாழ்வதற்குத் தேவையான சூழலைக் கொண்டதாக இயற்கை உலகம் இருக்கிறது. மனிதர்களாகிய நாம் இயற்கையோடு இயைந்து உற்பத்தி செய்ய, வாழ, வளர்ச்சி அடைய முடிந்தால், இயற்கை என்பது நமக்குத் தேவையான அனைத்தையும் கொடையாக வழங்கும். இருப்பினும், மனிதன் தன்னுடைய

அறிவினாலும், கண்டறியும் மேதைமையாலும் இயற்கையின் ஆற்றலைக் கட்டுப்படுத்தும் போது, இயற்கை அவனைத் தாக்குகிறது''.

இயற்கையே அனைத்து உயிர்களுக்கும் தாய். மனிதகுலமும், இயற்கையும் இணைந்து ஒரு உயிரியல் சமூகமாக இருக்கின்றன. மனித இனம் இயற்கையைப் போற்றி, அதன் வழிகளைப் பிந்தொடர்ந்து, அதனைப் பாதுகாக்க வேண்டும். மனிதர்களுக்கும் இயற்கைக்கும் இடையிலான ஒருங்கிணைப்பை நாம் உறுதி செய்ய வேண்டும், தெளிவான நீர்நிலைகளும், பசுமையான மலைகளும் விலைமதிப்பற்ற சொத்துக்கள் என்பதை உறுதியாக உணர்ந்து, உளப்பூர்வமாக இந்தப் புரிதல் மீது நாம் செயல்பட வேண்டும். சுற்றுச்சூழல் பண்பாட்டைக் கட்டமைத்து, அழகானதொரு சீனாவை உருவாக்குவதற்காக சமுதாயத்தின் அனைத்து துறைகளையும் ஒருங்கிணைக்க வேண்டும். அவ்வாறு செய்வதன் மூலம், தெளிவான நீர்நிலைகள், பசுமையான மலைப் பகுதிகளில் வாழும் மக்கள் இயற்கை, வாழ்க்கை, இருத்தல் ஆகியவற்றின் அழகை ரசிப்பதை நாம் உறுதிப்படுத்த வேண்டும். அதிகமான உற்பத்தி, உயர்வாழ்க்கைத் தரங்கள் மற்றும் ஆரோக்கியமான சுற்றுச்சூழல் ஆகியவற்றைக் கொண்ட நீடித்த வளர்ச்சி மாதிரி ஒன்றை நாம் மேற்கொள்ள வேண்டும்.

### கம்யூனிஸ்ட் கட்சி:

மார்க்சிய அரசியல் கட்சியை வளர்ப்பதற்கான மார்க்சிய சிந்தனைகளைக் கற்றலும், கடைப்பிடித்தலும் மார்க்சைப் பயில்வதற்கு அவசியமாகும். ''முதலாளி வர்க்கத்திற்கு எதிரான போராட்ட உழைக்கும் வர்க்கத்தின் போராட்டமானது பல்வேறு வளர்ச்சிக்கட்டங்களை கடந்து செல்ல வேண்டியுள்ளது, எல்லாச் சூழலிலும், எல்லாவிடத்திலும் அந்த இயக்கத்தின் நலனை ஒட்டுமொத்தமாக பிரதிபலிக்கின்றனர்'' என்பதை மார்க்ஸ் விளக்கியுள்ளார், ''பாட்டாளி வர்க்கத்தின் ஒட்டுமொத்த நலன் அல்லாமல் தனிப்பட்ட விருப்பங்கள் ஏதுமில்லை'', இது தவிர ''மிகப்பெரும்பான்மையானவர்களின் நலனுக்காக'', ஒரு கம்யூனிச சமுதாயத்தை உருவாக்குவதற்காக போராடவும் அவசியம் உள்ளது.

''கட்சியின் இயக்கத்தின் அளவுமட்டத்தைக் கொண்டு ஒட்டுமொத்த உலகிற்கும் முன்னுதாரணங்களை'' ஒரு கம்யூனிஸ்ட் கட்சி நிச்சயம் உருவாக்க

வேண்டும். எப்போதும் மக்களுடன் இணைந்து நின்று அவர்களின் நலன்களுக்காக போராடுவதாக இருப்பதே, மார்க்சிய அரசியல் கட்சிக்கும் மற்ற அரசியல் கட்சிகளுக்கும் இடையேயான அடிப்படை வேறுபாடாக இருக்கிறது. நமது போராட்டங்கள், திட்டங்கள், நோக்கங்கள், கனவுகளை ஒருங்கிணைத்து, அரசியல் நேர்மையை நிலைநிறுத்துவதன் அவசியத்தை உணர்ந்து, பெருமளவில் சிந்தித்து, தலைமையைப் பின்பற்றி அதனோடு நம்மை நேர்நிறுத்திக் கொள்ள வேண்டும்.

கட்சியின் மீது முழுமையான, கண்டிப்பான ஆளுமையை முன்னெடுத்துச் செல்ல நாம் தொடர்ந்து போராட வேண்டும். அரசியல் ரீதியாக கட்சியைப் பலப்படுத்தவும், ஒட்டுமொத்த கட்சித் தலைமையை பலப்படுத்தவும், மத்திய குழு மற்றும் அதன் மையப்படுத்தப்பட்ட, ஐக்கியப்பட்ட தலைமையின் அதிகாரத்தை நிலைநிறுத்தவும் முன்னுரிமை கொடுக்க வேண்டும். உண்மையை முன்னிறுத்தி, தவறுகளைச் சரிசெய்து கொள்கிற கம்யூனிஸ்ட்களின் அரசியல் தன்மையை எப்போதும் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். நமது மக்களின் ஆதரவை முழுமையாகப் பெற்றதாக, தன்னைத் தானே சீர்திருத்திக் கொள்வதற்கான தைரியம் மிக்கதாக, அனைத்து சவால்களையும் எதிர் கொள்ளும் திறன் கொண்டதாக, அனைத்து காலகட்டத்திலும் முன்னணியில் இருக்கின்ற துடிப்பான மார்க்சிய ஆளும் கட்சியாக கட்சியைக் கட்டியமைக்க வேண்டும்.

### புதியன படைப்பாக்கம்:

அறிவியல் கோட்பாடுகளை அணுகுவதற்கு அறிவியல் அணுகுமுறை தேவைப்படுகிறது. “மார்க்சின் ஒட்டுமொத்த சிந்தனைகளும் ஒரு வழிகாட்டுத் தொகுப்பாக, வழிமுறையாக அமைந்திருக்கவில்லை. முன்பே தயாரிக்கப்பட்ட சூத்திரங்களை அதிலிருந்து பெற முடியாது, கூடுதலாக ஆய்ந்து அறிவதற்கோ, ஆய்வுக்கான வழிமுறையைப் பெறுவதற்கோ உதவுகிறவை அல்ல” என்று தன்னுடைய ஆழ்ந்த கருத்துக்களை ஏங்கெல்ஸ் ஒருமுறை வெளியிட்டார், அவர் மேலும் குறிப்பிடுகையில், கோட்பாடுகள் எனப்படுபவை “வரலாற்று விளைபொருள்களாக இருப்பதால், அவை வெவ்வேறு காலங்களில் வேறுபட்ட வடிவங்களைக் கொண்டிருக்கின்றன. எனவே அவற்றின் உள்ளடக்கங்களும் மிகவும் மாறுபட்டவையாகவே இருக்கின்றன.” என்றார்.

விஞ்ஞான சோசலிசத்தின் அடிப்படைக் கோட்பாடுகளை நம்மால் நிராகரிக்க முடியாது. ஒருவேளை அவ்வாறு நிராகரித்து ஒதுக்கிவிட்டால், சோசலிசம் என்பதே காணாமல் போய் விடும். அதே நேரத்தில், விஞ்ஞான சோஷலிசம் என்பது மாறாத கொள்கை அல்ல. வெறுமனே நமது வரலாற்றையும் கலாச்சாரத்தையும் தொடருகின்ற வகையில் பிரதியெடுக்கின்ற வகையிலோ அல்லது வெறுமனே இயந்திரத்தனமாக மரபுவழியிலான மார்க்சிய ஆசிரியர்களின் கருத்துக்களைப் பயன்படுத்துகின்ற வடிவத்திலோ, அல்லது பிற நாடுகளில் சோசலிசம் நடைமுறைப்படுத்தப்படுவதை மறுபதிப்பு செய்வதாகவோ அல்லது வெளிநாட்டில் இருந்து வருகின்ற நவீனமயமாக்கலின் போலியாகவோ சீனாவில் நடைபெற்றிருக்கும் மிகப் பெரிய சமூக உருமாற்றம் என்பது இருக்கவில்லை. சோசலிசம் என்பதற்கு மரபுசார்ந்த, மாறுபடாத வடிவம் என்பது பொருளல்ல. நாட்டின் குறிப்பிட்ட சூழல், வரலாறு, கலாச்சார மரபுகள், சமகாலத் தேவைகள் ஆகியவற்றோடு, விஞ்ஞான சோசலிசத்தின் அடிப்படைக் கொள்கைகளை நெருக்கமாக இணைப்பதன் மூலமாகவும் சோசலிச நடைமுறைகளை பரிசீலித்து, ஆய்வு செய்து தொடர்ந்து முன்னெடுப்பதாலும் மட்டுமே, அதன் செயல்திட்டம் சாத்தியமாகும்.

இந்தக் கோட்பாட்டின் வலிமை என்பது அதனைத் தொடர்ச்சியாக புத்தாக்கம் செய்வதிலேயே இருக்கிறது. மார்க்சியத்தின் தொடர்ச்சியான வளர்ச்சியை ஊக்கப்படுத்துவது சீன கம்யூனிஸ்டுகளின் புனிதமான கடமையாக இருக்கிறது. சமகால சீனாவிலிருந்து பெறப்பட்ட ஏராளமான, எழுச்சி தருகின்ற அனுபவங்களைப் பயன்படுத்துவதன் மூலமாகவும், மனிதகுலத்தின் அனைத்து நாகரிகங்கள் குறித்த பரந்த உலகளாவிய பார்வையைப் பயன்படுத்தியும் இந்த உலகைப் பற்றிய ரகசியங்களை அறிந்து கொள்ளவும், அதன் தலைமையை நாம் ஏற்கவும் மார்க்சியத்தைக் கடைப்பிடிப்பதற்கான உறுதியுடன் தொடர்ந்து நாம் இருக்க வேண்டும்.

நம்மை நாமே விஞ்சுகிற வகையில் தொடர்ச்சியாக நம்மை புதுப்பித்துக் கொண்டு, நமது முன்னேற்றத்திற்காக மற்றவர்களின் பலங்களிலிருந்து பரவலாக கற்றுக் கொள்கின்ற வேளையில் நமது அடித்தளங்களைத் தொடர்ந்து பாதுகாப்பதில் உறுதியாக இருக்க வேண்டும். இறுதியாக, கம்யூனிஸ்ட் கட்சியின் ஆளுமை,

*சோசலிச வளர்ச்சி, மனித சமுதாயத்தின் பரிணாம வளர்ச்சி, இந்த 21ஆம் நூற்றாண்டில், இன்றைய சீனாவில் மார்க்சியத்தின் வளர்ச்சிக்கான புதிய வாய்ப்புகளை ஏற்படுத்துதல் போன்றவற்றிற்கு உள்ளீடாய் இருக்கின்ற விதிகளைப் பற்றி நமது புரிதலை விரிவாக்கிக் கொள்ள வேண்டும்.*

*தோழர்களே, மனிதகுல வரலாற்றில் மிகப்பெரிய சிந்தனையாளருக்கு மரியாதை செலுத்துவதற்கும், மார்க்சியத்தின் அறிவியல்பூர்வ உண்மை மீது நமக்கிருக்கும் உறுதியான நம்பிக்கையைத் தெரிவிப்பதற்கும் மார்க்சை நாம் இன்று நினைவு கூர்கிறோம்.*

*"இதுவரை நடந்திராத மிகப்பெரிய பிரம்மாண்டமான புரட்சி, பிரம்மாண்ட புரட்சிக்கான வாய்ப்பு, நமது பொருள்வாதக் கருத்தை விரிவாக்கி தொடர்வதற்கும், தற்போதைய காலகட்டத்தில் அதனைப் பயன்படுத்துவதற்குமான வாய்ப்பை, நமக்கு அளித்திருக்கிறது." என்று ஏங்கெல்ஸ் ஒருமுறை கூறினார். நமக்கு முன்பாக இருக்கின்ற பாதையில் மார்க்சியத்தை நாம் தொடர்ந்து முன்னெடுத்துச் செல்ல வேண்டும். மனித சமுதாயத்திற்காக மார்க்சும் ஏங்கல்ஸும் எதிர்பார்த்தவற்றை சீனா முழுமைக்கும் என்றும் நிரந்தரமாக இருப்பதாக விரிவுபடுத்தி அனைவரும் வியக்கத்தக்க எதிர்காலத்தை நாம் உறுதிப்படுத்த வேண்டும். (பெய்ஜிங், மே 4, 2018)*




## கணியம் அறக்கட்டளை

### தொலை நோக்கு – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழலை உருவாக்குதல்.

### பணி இலக்கு – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

### எமது பணிகள்

#### கணியம் மின்னிதழ் kaniyam.com

கணிப்பொறி சார்ந்த கட்டுரைகள், காணொளிகள், மின்னூல்களை இங்கு வெளியிடுகிறோம்.

#### கட்டற்ற தமிழ் நூல்கள் FreeTamilEbooks.com

இங்கு யாவரும் எங்கும் பகிரும் வகையில், கிரியேட்டிவ் காமன்ஸ் உரிமையில், தமிழ் மின்னூல்களை இலவசமாக, அனைத்துக் கருவிகளிலும் படிக்கும் வகையில் epub, mobi, A4 PDF, 6 inch PDF வடிவங்களில் வெளியிடுகிறோம்.

• தமிழுக்கான கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்கம்

• தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்

• விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்

*OpenStreetMap.org* ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், முழுமையான வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும். இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம். கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், *GNU GPL, Apache, BSD, MIT, Mozilla* ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

## நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும். பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உங்கள் விவரங்களை *kaniyamfoundation@gmail.com* க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

*Kaniyam Foundation*

*Account Number : 606 1010 100 502 79*

*Union Bank Of India*

*West Tambaram, Chennai*

*IFSC – UBIN0560618*

